ரிஜிஸ்த்தற் ஜட்ஜி துறையவற்கள் சயனுடன் சர்வாதிகார மொக்கத்தியா றனுமா கொடுத்து அது வயணங்களை சப் கலேகட்டற் துறையவர்களுக்கும் யிவடத்தில் சிஷியாளுக்கும் தெரியப்படுத்தி ஷெ மடாதிபதி யாத்திரை போயிருக்கிறுர்.

அப்படியிருக்க சம்பந்த மில்லாத முத்தண்ணு யென்பவன் ஒருவனுக்கு யிள வரிசைபோல பிறட்டு செயித சங்கதிக்கி சற்க்காரில் யாதி ௳டுத்ததின்பேரில் மாஜி சரிகீல் அவன் யிளவரிசை அல்லவெண்டு அது வயணங்களைக்கண்டு ஷெ யென் மொகத்தியார் நாமாவை ஸ்தாபித்து ௲அ௱௪௰ ௵ யிப்பறவரி மீ'த்தில் மாஜி ஆக்ட்டிங்க் கலேகட்டருகிய பிஷப்துரை யவற்களுக்கு மிம்மோருண்டம் யெழிதி யிருக்குறுர்கள். அதற்குச் சரியான நகல் யெனக்கு தேவையாயிருக்குது.

ஆகையால் தயவு செயிது ஷெ மிம்மோருண்டத்துக்கு சரியான நகல் முத்திரை கடுதாசியில் குடுக்கும்படி உத்தரவாகவேணுமென்று கேட்டுக் கொள்ளுகுரேன்.

௲அ௱௪௰௪ ௵ }
செனவரி மீ' ௰௨ }

கு. சுப்பய்யன்
கையெழுத்து.

இவ்வாவணத்தில் ஆங்கிலம் மிகுதியாகக் கலந்து எழுதப்பட்டுளது. தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணத்தில் உள்ள பெரிய மடம் என்று குறிப்பிடப் பட்டுள்ளதால், இது எந்த ஆதீனத்தைச் சேர்ந்த மடம் என்பது புலனுகவில்லை. ஆனுல் 1844ல் திரு. சாரங்கத்தேவர் என்ற ஒருவர் இருந்திருப்பது தெரிகின்றது. அவ்வாதீன வழக்கம் சர்க்கார் மூலம் பட்டம் பெறுவது போலும். பிழைகள் அதிக மாக உள்ள இவ்வாவணம் இரண்டுமடிப்பைக் கொண்டது.

ஆவணம் எண் ௨௬

இஹீங்தே ஸம்மா னைனமயா அல்லப்

சவ்வால் மீ' 5 2

1. ஹைதர் நாயக்கர் காலாபத்துனுலே ஸ்ரீமுஷ்டம் விருத்தாசலம் இந்த ரெண்டு ஸ்தலங்களிலிருந்த சுவாமிகள் யாவும் ஸ்ரீமாயூரநாத சுவாமிகோயிலில் வந்து இருப்பதால் பூசை நைவேத்தியம் நடத்திவர

| | | |
|---|---|---|
| விருத்தாசலேசுவற சுவாமிக்கி | வராகன் | 1. |
| நித்தியேசுவற சுவாமிக்கி | பணம் | 5. |
| | | 15 |

நாள் 1க்கு பதினேஞ்சு பணம் விதம் சுவாமி அவடம் யிருக்குற வரைக்கும் கொடுக்கும்படி உத்திரவு யாதீ 1.

2. காட்டுமன்னுர் கோவில் ஸ்ரீ ராஜகோபாலசுவாமி பந்தநல்லூரில் வந்திருப்பதால் பூசைக்காக நாள் 1-க்கு பணம் அஞ்சு வீதம் சுவாமி அவடத்திலிருக்கிற வரையிலும் குடுக்கும்படி உத்திரவு யாதீ. 1.

(ஆக) உ.

இவ்வாவணம் ஒரு சிறு துண்டுக்காகிதமெனினும் கையினுல் செய்யப்பட்ட காகிதம். அதில் அரக்கு மையினுல் எழுதப்பட்டுளது. வெகுதூரத்திலுள்ள கோயில்களுக்கு எல்லா மக்களும் செல்ல இயலாது என்பதற்காக ஊரிலுள்ள பெருந்தனக்காரர்களோ, அரசர்களோ சிறப்புவாய்ந்த பிற ஊர் தெய்வங்களை அழைத்து விழாச்செய்வது வழக்கம். அந்தந்த ஊர் கோயில் பாதுகாப்பாளர்கள் தாமே கோயில் செலவிலேயே பிற ஊர்களுக்குத் தங்கள் கோயில் தெய்வங்களை (எழுந்தருளுருவங்களை) அனுப்பிவைப்பதுண்டு. இன்றும் மாசிமக விழாவன்று, பாண்டிச்சேரி எனப்படும் புதுச்சேரிக்கு, வெகுதொலைவிலுள்ள செஞ்சி, மயிலம் முதலான ஊர்களிலிருந்து எழுந்தருளுத் தெய்வங்களைக் கொண்டுவந்து கடலாடல் செய்வித்துத் தாமும் கடலாடி விழாக்கொண்டாடுவர். மாசி மகத்தன்று ஒரு நூற்றுக்கு மேற்பட்ட தெய்வங்களை ஒரேசமயத்தில் கடலாடி வழிபடலாம். மறுநாள் அவ்வத் தெய்வங்கள் அவ்வவ்வூருக்கு எழுந்தருளிச் சென்றபோதிலும், (தென்னுற்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டம்) 'மயிலம்' என்னும் ஊரிலிருந்து வந்து கடலாடிய முருகன் மட்டும் தனக்கெனப் புதுச்சேரியில் ஏற்படுத்தப்பட்ட சிவஞான பாலைய சுவாமிகள் மடத்தில் நான்கைந்து நாட்கள் தங்கிப் பல்வேறு கோலம் புனைந்து அடியார்களுக் கருள்புரிந்து, பின்னர் மயிலம் செல்வார். மயிலத்தில் ஒரு குன்றின்மீது முருகவேள் கோயில்கொண்டெழுந்தருளியுள்ளார். மயில் இம் முருகவேளை வழிபட்டுப் பேறுபெற்றதால் இதற்கு 'மயிலம்' எனப் பெயர் வந்ததாகக் கூறுவர். அருணகிரியார் பாடல் பெற்ற தலம் இது.

அதுமட்டுமன்றி போர்க்காலங்களில் அன்னியருடைய படையெடுப்பால் கடவுளுருவங்கட்குச் சேதம் ஏற்படாதிருத்தல் பொருட்டும் ஒரூரிலிருந்து மற்றோரூருக்குத் தெய்வ உருக்கள் செல்வதுண்டு. அப்படிச்செல்ல நேரிட்டதேயாம் இந்த நிகழ்ச்சி.

'இஹீந்தே ஸம்மா னைனமயா அல்லப்' எள்ருல் ஆண்டு 1181. அக்காலத்தே 'சூஹர்சன்' ஆண்டு வழக்கிலிருந்தது. அந்த சூஹர்சன் ஆண்டே இந்த 1181. அதனைக் கி. பி. ஆக்குதற்கு 599-ஐக் கூட்டவேண்டும். அப்படிச் சேர்க்கக் கி. பி. ஆண்டு 1780 ஆகும். அதுகாலை தஞ்சையில் சத்ரபதி துளஜா மகாராஜா செங்கோல் செலுத்தினுர். ஆகவே இது மன்னர் துளஜா அவர்களின் உத்தரவாகும்.

இந்தத் துளஜா மகாராஜாவின் காலத்தில் ஸ்ரீமுஷ்ணம், விருத்தாசலம் முதலான பகுதிகளில் 'ஹைதர் நாயக்கர்' என்பார் படையெடுத்திருந்தார்

பின்பு வெனைக்காணப் பெற்றிலே னம்மானை
பெற்றதே தென்றுலென் பேசுகே னம்மானை. 24

ஆனந்த மான வஞ்செழுத் தம்மானை
யஞ்செழுத்தாய் நின்றே யாடினு னம்மானை
தானந்தத் தற்போத முற்றுன்கா ணம்மானை
தன்னெழுத் தாலெங்குந் தானுனு னம்மானை. 25

அஞ்சி லிருள்கெட வாடினு னம்மானை
யந்த விரண்டின்மேற் றேய்ந்தான்கா ணம்மானை
யஞ்சி லிரண்டின்மே லானதே யம்மானை
யான விரண்டுப்(போ) யற்றதே யம்மானை. 26

(பிள்ளை)யாய்ப் பித்தனுய்(ப் பே)யானே னம்மானை
பேரின்ப வெள்ளத்தே யோரின்ப மாகச்சென்
றுள்ளவா றுய்நினைந் தொன்றுனே னம்மானை
யொன்றுகி நின்றுலு மொன்றுகே னம்மானை. 27

பேராத பேரின்பந் தானுனே னம்மானை
பேரின்பந் தானும்போய்ப் பேரின்பத் தீர்த்ததே
நேரா வழிதந் துண்மைச் சிவமாகி
நில்லா நிலையும்போய் நின்றேன்கா ணம்மானை. 28

பூசனை வாசனை பொத்தகஞ் சாத்திரம்
போகாமற் போக்கறப் போனதே யம்மானை
நேசமுங் கண்ணீரு நில்லா தாற்றலு
நிட்டையு மொட்டற விட்டதே யம்மானை. 29

செத்தாரை யொத்துத் திரிகின்றே னம்மானை
சேர்சிவ மாகி வேறற்றே னம்மானை
சித்தாகி வெற்றுட லர்னேன்கா ணம்மானை
தேசிகன் சித்தம் பேசொணு தம்மானை. 30

ஞானந்தா னுனுந் தேசிக னம்மானை
நான்கண்ட தெய்வமுந் தேசிக னம்மானை
யானந்தா தீதனு தேசிக னம்மானை
யம்மானை யம்மானை யம்மானை யம்மானை. 31

ஞான வம்மானை முற்றும்.

---

அன்பது வருஷமாய் கடைகட்டி யாபாரம் பண்ணிக்கொண்டு கோவிலுக்கு கஸ்த் தூரி கடை கூக்கு மீ சூக்கு பணம் 2 வீதம் குடுத்துக்கொண்டு நாளது வரைக்கும் ..........................................................................................................

ஞாயமான ஒத்தாசை செய்விக்க வேண்டியது.

இவ்வாவணம் கடுக்காய் மையினல் எழுதப்பட்டுளது, தேதி, கையொப்பம் ஏதுமில்லே. தஞ்சை விண்ணுற்றங்கரையில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள மேல சிங்கப்பெருமாள் கோயிலுக்குச் சொந்தமான இடங்களில் கடை வைத்திருந் தால், அக்கடை 1க்கு மாதம் 1க்கு 2 பணம் வரியாகத் தந்தனர். அவ்வரிக்குக் 'கஸ்தூரி வரி' எனப் பெயர்போலும். இதில் வேறு சிறப்புச் செய்தி யேதுமில்லே.

## ஆவணம் எண் உச

சூஅாசகூ ஞு சப்டம்பற் மீ ௰ உ யிதினடியில் கையெழுத்து வைத்த னுங்களனவரும் யெழுதிக்கொடுத்த மாதற்னுமா யென்னவெண்ருல்

மாதொஸ்ரீ அகலியம்பா சத்திறம் கோவில் வகயரு தோட்டம் காவல் செங்கதியான—நாளது ஞு அகஷ்ட்டு மீ கூ பகல் எ னுழிகை வெளாயில் ஷெ தோட்டம் கச்சேரி வாசலில் லிருக்கும்போது பள்ளி அக்கிறகாறம் பட்டாமணியம் முத்துவைய்யனும், ஷெ யானேடை கூட்டாயிருந்த திருவாதி தாலுக்கா........... ..........................................................................................................

பெரியதம்பி கையெழுத்து ..........................................................................

.................................................................................... வரதன்செட்டி கையெழுத்து.

இவ்வாவணம் கையால் செய்யப்பட்ட நீண்டதொரு காகிதத்தில் எழுதப் பட்டுளதேனும் சிறப்புச் செய்திகள் ஏதுமில்லே. மாதுஸ்ரீ அகலியம்பா பாயி சாகேப் அவர்கள் பல சத்திரங்களைக் கட்டியுள்ளார்கள். காசியிலும், இராமேச்சுரத் திலும் இவர்கள் கட்டிய சத்திரங்கள் இருப்பதாகக் கூறுவர்.

## ஆவணம் எண் உ௬

ராஜ ஸ்ரீ மகாருஜா சாயேபவற்கள் தீவாணத்துக்கு கும்பகோணம் பெரிய மடம் விசாறணே சுப்பண்ணு யென்ங்கற சுப்பய்யன் யெழுதிகுடுத்தமனு யென்ன-வென்ருல்.

ஷெ ஆதிண கற்தருகிய ஸ்ரீ சாரங்கதேவருக்கு நெரியாண சமீபத்தில் வேரே ஒருவரை அவற் னேமித்தபோதிலும் யிந்த சற்க்காரில் யாதி குடுத்து உத்தறவும், வத்ஸ்திறமும் பெத்துக் கொண்டுபோயி அவருக்கு பட்டம் னேமிக்கிறது ஆதீன பறம்பறை வஷக்கம். அந்தப்படிக்கி பில வறஷம் அற்ப்பிசி மீ ௰௯உ யில் பட்டாபிஷேகமாயிருக்குற ஷெ ஆதீனகற்த்தர் யெனக்கு யிந்த ஜில்லா

ரிஜிஸ்த்தற் ஜட்ஜி துறையவற்கள் சயனுடன் சர்வாதிகார மொக்கத்தியா றனுமா கொடுத்து அது வயணங்களை சப் கலேகட்டற் துறையவர்களுக்கும் யிவடத்தில் சிஷியாளுக்கும் தெரியப்படுத்தி ஷெ மடாதிபதி யாத்திரை போயிருக்கிறுர்.

அப்படியிருக்க சம்பந்த மில்லாத முத்தண்ணு யென்ம்பவன் ஒருவனுக்கு யிள வரிசைபோல பிறட்டு செயித சங்கதிக்கி சற்க்காரில் யாதி குடுத்ததின்பேரில் மாஜி சரிகீல் அவன் யிளவரிசை அல்லவெண்டு அது வயணங்களைக்கண்டு ஷெ யென் மொகத்தியார் நாமாவை ஸ்தாபித்து ௲அ௱சசெ ௵ பிப்பறவரி மீ'த்தில் மாஜி ஆக்ட்டிங்க் கலேகட்டருகிய பிஷப்துரை யவற்களுக்கு மிம்மோருண்டம் யெழிதி யிருக்குருர்கள். அதற்குச் சரியான நகல் யெனக்கு தேவையாயிருக்குது.

ஆகையால் தயவு செயிது ஷெ மிம்மோருண்டத்துக்கு சரியான நகல் முத்திரை கடுதாசியில் குடுக்கும்படி உத்தரவாகவேணுமென்று கேட்டுக் கொள்ளுகுரேன்.

| | |
|---|---|
| ௲அ௱சுசெ ௵<br>செனவரி மீ' செஉ | கு. சுப்பய்யன்<br>கையெழுத்து. |

இவ்வாவணத்தில் ஆங்கிலம் மிகுதியாகக் கலந்து எழுதப்பட்டுளது. தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணத்தில் உள்ள பெரிய மடம் என்று குறிப்பிடப் பட்டுள்ளதால், இது எந்த ஆதீனத்தைச் சேர்ந்த மடம் என்பது புலனுகவில்லை. ஆனல் 1844ல் திரு. சாரங்கத்தேவர் என்ற ஒருவர் இருந்திருப்பது தெரிகின்றது. அவ்வாதீன வழக்கம் சர்க்கார் மூலம் பட்டம் பெறுவது போலும். பிழைகள் அதிக மாக உள்ள இவ்வாவணம் இரண்டுமடிப்பைக் கொண்டது.

ஆவணம் எண் உகூ

இஹீங்தே ஸம்மா னைனமயா அல்லப்

சவ்வால் மீ' 5 2

1. ஹைதர் நாயக்கர் காலாபத்துனலே ஸ்ரீ முஷ்டம் விருத்தாசலம் இந்த ரெண்டு ஸ்தலங்களிலிருந்த சுவாமிகள் யாவும் ஸ்ரீ மாயூரநாத சுவாமிகோயிலில் வந்து இருப்பதால் பூசை நைவேத்தியம் நடத்திவர

| | | |
|---|---|---|
| விருத்தாசலேசுவற சுவாமிக்கி | வராகன் | 1. |
| நித்தியேசுவற சுவாமிக்கி | பணம் | 5. |
| | | 15 |

நாள் 1க்கு பதினஞ்சு பணம் வீதம் சுவாமி அவடம் யிருக்குற வரைக்கும் கொடுக்கும்படி உத்திரவு யாதீ 1.

2. காட்டுமன்னூர் கோவில் ஸ்ரீ ராஜகோபாலசுவாமி பந்தநல்லூரில் வந் திருப்பதால் பூசைக்காக நாள் 1-க்கு பணம் அஞ்சு வீதம் சுவாமி அவடத்தி லிருக்கிற வரையிலும் குடுக்கும்படி உத்திரவு யாதீ. 1.

(ஆக) உ.

இவ்வாவணம் ஒரு சிறு துண்டுக்காகிதமெனினும் கையினால் செய்யப்பட்ட காகிதம். அதில் அரக்கு மையினால் எழுதப்பட்டுளது. வெகுதூரத்திலுள்ள கோயில்களுக்கு எல்லா மக்களும் செல்ல இயலாது என்பதற்காக ஊரிலுள்ள பெருந்தனக்காரர்களோ, அரசர்களோ சிறப்புவாய்ந்த பிற ஊர் தெய்வங்களை அழைத்து விழாச்செய்வது வழக்கம். அந்தந்த ஊர் கோயில் பாதுகாப்பாளர்கள் தாமே கோயில் செலவிலேயே பிற ஊர்களுக்குத் தங்கள் கோயில் தெய்வங்களை (எழுந்தருளுருவங்களை) அனுப்பிவைப்பதுண்டு. இன்றும் மாசிமக விழாவன்று, பாண்டிச்சேரி எனப்படும் புதுச்சேரிக்கு, வெகுதொலைவிலுள்ள செஞ்சி, மயிலம் முதலான ஊர்களிலிருந்து எழுந்தருளுத் தெய்வங்களைக் கொண்டுவந்து கட லாடல் செய்வித்துத் தாமும் கடலாடி விழாக்கொண்டாடுவர். மாசி மகத்தன்று ஒரு நூற்றுக்கு மேற்பட்ட தெய்வங்களை ஒரேசமயத்தில் கடலாடி வழிபடலாம். மறுநாள் அவ்வத் தெய்வங்கள் அவ்வவ்வூருக்கு எழுந்தருளிச் சென்றபோதிலும், (தென்னாற்காடு மாவட்டம், திண்டிவனம் வட்டம்) 'மயிலம்' என்னும் ஊரிலிருந்து வந்து கடலாடிய முருகன் மட்டும் தனக்கெனப் புதுச்சேரியில் ஏற்படுத்தப்பட்ட சிவஞான பாலைய சுவாமிகள் மடத்தில் நான்கைந்து நாட்கள் தங்கிப் பல்வேறு கோலம் புனைந்து அடியார்களுக் கருள்புரிந்து, பின்னர் மயிலம் செல்வார். மயிலத் தில் ஒரு குன்றின் மீது முருகவேள் கோயில்கொண்டெழுந்தருளியுள்ளார். மயில் இம் முருகவேளை வழிபட்டுப் பேறுபெற்றதால் இதற்கு 'மயிலம்' எனப் பெயர் வந்த தாகக் கூறுவர். அருணகிரியார் பாடல் பெற்ற தலம் இது.

அதுமட்டுமன்றி போர்க்காலங்களில் அன்னியருடைய படையெடுப்பால் கடவுளுருவங்கட்குச் சேதம் ஏற்படாதிருத்தல் பொருட்டும் ஒரூரிலிருந்து மற்றோ ரூருக்குத் தெய்வ உருக்கள் செல்வதுண்டு. அப்படிச்செல்ல நேரிட்டதேயாம் இந்த நிகழ்ச்சி.

'இஹீந்தே ஸம்மா னைனமயா அல்லப்' எள்ருல் ஆண்டு 1181. அக் காலத்தே 'சூஹர்சன்' ஆண்டு வழக்கிலிருந்தது. அந்த சூஹர்சன் ஆண்டே இந்த 1181. அதனைக் கி. பி. ஆக்குதற்கு 599-ஐக் கூட்டவேண்டும். அப்படிச் சேர்க்கக் கி. பி. ஆண்டு 1780 ஆகும். அதுகாலை தஞ்சையில் சத்ரபதி துளஜா மகாராஜா செங்கோல் செலுத்தினர். ஆகவே இது மன்னர் துளஜா அவர்களின் உத்தரவாகும்.

இந்தத் துளஜா மகாராஜாவின் காலத்தில் ஸ்ரீமுஷ்ணம், விருத்தாசலம் முதலான பகுதிகளில் 'ஹைதர் நாயக்கர்' என்பார் படையெடுத்திருந்தார்

போலும். அதனல் விருத்தாசலம் என்னும் திருமுதுகுன்றத்தினின்று விருத்தாம்பிகை, பாலாம்பிகையுடன் பழமலைநாதரும், ஸ்ரீமுஷ்ணத்திலிருந்து நித்தியேசுவர சுவாமியும் மாயூரத்திலுள்ள அபயாம்பிகை சமேத மயூரநாத சுவாமி கோயிலில் வந்து தங்கியுள்ளனர் போலும். அதுகாலை அத்தெய்வங்கட்குப் பூசை நிவேதனங்களுக்காகத் தஞ்சை அரண்மனையார் நாள் ஒன்றுக்கு பதினைந்து பணம் கொடுத்து வழிபட்டுவந்தனர்.

அவ்வாறே, காட்டுமன்னார்குடியிலுள்ள ஸ்ரீ ராஜகோபாலசுவாமி கும்பகோணத்தை அடுத்துள்ள பந்தணைநல்லூரில் உள்ள கரம்பனை தோளியம்மை சமேத பசுபதீச்சுரர் கோயிலில் வந்து தங்கியிருந்தார். அதுபோதும், தஞ்சை அரண்மனையார் நாள் 1-க்கு 5 பணம் வீதம் கொடுத்து வழிபட்டு வந்தனர் என்பது புலனாகின்றது. இப்படியான துளஜாமகாராஜாவின் இரண்டு உத்தரவுகளும் ஒரே துண்டுக்காகிதத்தில் எழுதப்பட்டுள்ளது.

ஆவணம் எண். உ௧

|௭| மகாராசா சாயபு அவர்கள் அறமனை சர்க்கீல் மகாருச ஸ்ரீ பந்து சுவாமி அவர்கள் சமூகத்துக்கு அசரபுஷா சாயபு அவர்கள் மக்கான்தார் காதற லிஷா காதரி மிகவும் துவா செய்து யெழுதிக்கொண்டது. யென்னமென்றால்

முதலாவது யென்குரு முறை 3-ம் பாட்டனாகிய ஷெ அசரபுஷா சாயபு யிந்த சமஸ்த்தானத்துக்கு வந்து மக்கான் முதலானது சம்பாரித்து, சில பக்கிரியள் தரிக்குட்டி செயிது யெறந்துபோன பிறகு, அந்த பக்கிரிகள் தர்மம் நடப்பிவித்து வந்து, யெனக்கு உ-வது குருமுறை பாட்டனாயிருந்த குலாமே உகன்ஷா யென் சனக தகப்பன் உள்பட ௬-பேர்களை பக்கிரியள் செயிது யெறந்து போனபிறகு யென்குரு அசனுஷாபிதாய உசன்ஷாக் நான் உள்பட ச பக்கிரியள் செயிது தங்கள் பேரில் வைத்த தயவை எங்கள் ச பேரில் ... ... ...

ரு-வது ஷெ சாதிருவானது, அசர்புஷாசாயபு அவர்கள் கந்தூரி தினம், அவர்கள் கோரியின்பேரில் போத்த வேண்டியதுக்கு குடுக்கிறதே தவிர ஒருவனுக்கு யென்று குடுக்கிறதல்லவே. அது யார் மக்கானிலிருந்து கந்தூரி முதலானது நடப்பிபிக்கிராரோ அவர்கள் வாங்கி சந்தனத்துடன் மயித்த மக்கான்தார்கள், மயித்த துனியாதார்களும் கூடி ஷெ கோரியின்பேரில் பாத்தியா செய்து, அந்தச் சாதிராவை போத்தி மகாராஜா சாயபு அவர்கள் க்ஷேமத்துக்கு துவா செய்கிறது வழக்கம். ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...

ஆகையால் வேணும் அனேகம் துவா

தூ அராசகெ ஞ-மேன் மீ-கெஉ இவை தஞ்ச நகரம் கோட்டைக்குள் சரிக்கீல் மகாராச ஸ்ரீ பந்துசாமி சரிக்கீல் அவர்கள் சமூகத்துக்கு வருவது,

இது நான்கு பக்கங்களைக்கொண்ட நீண்ட தொரு ஆவணம். இதில் முக்கிய செய்தியை மட்டும் (5-வது) கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனைய பகுதிகள் வழக்கு கொண்டது.

இவ்வாவணத்திலிருந்து, மன்னர் சிவாஜியின் காலத்தில் மதவேறுபாடு இல்லை என்பது புலனாகின்றது. மன்னர் சிவாஜி மதவேறுபாடின்றி முகம்மதிய மதக்கந்தூரி விழாவுக்குச் சந்தனமும், சால்வையும் அனுப்பிய செய்தி தெரிகின்றது. வெகுகாலமாக தஞ்சை மராத்திய மன்னர்கள் மத வேறுபாடின்றி இது போன்ற செயலைச் செய்து வந்துள்ளனர். இன்றும் நாகூர் கந்தூரி விழாவில் ஒரு முக்கிய அங்கம் வகிக்கின்றது தஞ்சை அரண்மனை.

ஆண்டுதோறும், நாகூரில் அடங்கியுள்ள மீரா சாகேப் ஆண்டவர் அவர்களின் சமாதியில் நிகழும் (சந்தனக்கூடு), கந்தூரி விழாவுக்குத் தஞ்சை அரண்மனை மூத்த இளவரசர், இளைய இளவரசர் ஆகியோரால் சாதரா (கலேபு) அனுப்பப்பெறுகின்றது. தஞ்சையிலிருந்து, அரண்மனையாரால் நியமிக்கப்பட்டவர் (உசூர்) தலைமையில், சிலரோடு சாதரா (சால்வை) நாகூரை அடையும். அவர்கள் அவ்வூர் வண்டிக்காரத்தெருவில் வழக்கமாகத் தங்கும் வீட்டில் தங்கியிருப்பர்.

நாகூர் ஆண்டவர் தர்காவிலிருந்து யானை, குதிரை (சன்னு சவாரி) முதலான மரியாதைகளுடன் வந்து இவர்களை அழைத்துச் செல்வர். பின்னர், சமாதி மீது சால்வை போர்த்தி சந்தனம் பூசி, ஜமாக்கள், பீர்ஜமா, ஷோக்கிஜமா, கோஜாஜமா மண்டல்ஜமா, இவர்களுக்கும், ஓதுவார், சற்குரு ஆகியோருக்கும் மரியாதை செய்வர். பின்னர், இளவரசர்களின் நலனுக்காக அங்கு பாத்தியா (வழிபாடு) வேண்டுதல் நிகழும். பின் அவர்கள் தஞ்சை அரண்மனையாருக்கு மரியாதை செய்வர்.

பீர்ஜமா, ஷோக்கிஜமா, கோஜாஜமா, மண்டல்ஜமா, ஓதுவார் ஆகியோருக்கு நன்னான்கு தட்டு பூந்தி (மிட்டாய்) கொடுப்பர். நாட்டாண்மைக்காரருக்கு ஒன்பது தட்டு பூந்தி கொடுப்பர். வீட்டுக்காரருக்கு இரண்டு தட்டும், போய்வருகிறவருக்கு ஒரு தட்டும் பூந்தி கொடுப்பர். தர்காவுக்கு இடும் சாதரா எனும் சால்வை பனாரஸ் பட்டினால் தயாரிக்கப்படுவதாகும்.

ஆவணம் எண். உஅ.

மிமோருண்டம்

கமிஷனர் துறையவர்களுடைய நாளது மீ-20உ யுள்ள 1215 நிர் லெட்டரையும், ஷேக்குஇபுருமுடைய பிட்டிஷனையும் பெத்துக்கொண்டோம்,

அது காரியத்துக்கு யேகோஜி மகராஜா நாள் முதல் படே உசேனி அல்லா கோவிலுக்கு பூஜை முதலான ஆருகணை தஞ்சாவூர் மகாராஜாக்கள் செய்து கொண்டு வருகிறார்கள். ஷெ கோவிலுக்கு நீண்டகாலமாய் தவுலத்து பாவலோகு ... ... விலிருந்து நடந்துவந்த மொயினி மீ 1க்கு ரூ. 9 1857-ம்-ஷு பிப்பிரவரி-மீ 28வ யில் ஷெ 1 அவாலா ரத்தான உடனே நிறுத்தப்பட்டது. ஷெ அல்லா கோயிலுக்கு தஞ்சாவூர் மகாராஜாக்கள் தங்கள் குலதெய்வத்தைப்போலெண்ணி மிகவும் பக்தியுடனே மோயினிப்பணம் குடுத்து, பூஜைகளை நடத்திக்கொண்டிருந்த தினுல், அதின் மோயினி நிறுத்தக்கூடாதென்கிற அபிப்பிராயத்துனுல் மாஜி சர்க்கீல் ஸ்ரீ நீலகண்ட ருவு ஆனந்தருவு ஜாதவ் அவர்கள் அவாலா ரத்தான காலத்தில் மால்வாரிகளில் சிலர்களை நேமித்துக்கொண்டு சேவுகர்களுடைய ஜாப்தாக்கள் குடுத்தபோது ஷெ அல்லாகோயிலின் மொயினி ரூ. 9. ஸரஸ்வதி மாலில் தாகல் செயிது 57-ஷு ஜூன் மீ 22-வ ரிசிடெண்ட் துறையவர்களிடத்தில் ஒரு ஜாப்தா குடுத்திருக்கிறுர். அந்தத்துகை இண்டெண்டில் தாக்கலாகி மீ மீ பணம் வந்து ஷெ கோவிலுக்கு குடுக்கப்பட்டிருக்கிறது. அரண்மனை சேவுககாரர் களுடைய ஜாப்தா 58 ஷு மார்ச்சி மீ 9வ யுள்ள நம்முடைய 70 நி. லெட்டருடன் துரையவர்களிடத்தில் நர்மாலனுப்பப்பட்டபோது ஷெ அல்லா கோவில் மொயினி ரூ. 9. முன் நடந்த அனுஷ்டானப்படி ஸரஸ்வதி மகாலில் தாக்கல் செய்யப் பட்டிருக்கிறதும் தவிர இப்பால் 59 ஷு டிசம்பர் மீ 31வ ல் கமிஷனர் துரையவர் களிடத்தில் குடுபட்ட ஆள் மாகாணங்களுடைய ஜாப்தாக்களிலும் ஷெ ரூ. 9 ஸரஸ்வதி மகாலில் தாக்கலாகியிருக்கிறது. ஷெ அல்லாக்கோயில் மொயினி ரூ. 9 மீ மீ இண்டெண்டில் தாக்கலாகி பணம் வந்து நாளது ஷு பிப்ரவரி மீ வரையில் பட்டுவாடா செய்யப்பட்டிருக்கிறது. ஷெ மொயினி 57ஷு சூன் மீ 22வயில் மாஜி சரக்கீல் ஸ்ரீ நீலகண்டராவ் ஆனந்தராவு ஜாதவ் அவர்களால் குடுபட்ட சேவுகக்காரர்களான பேர்களுடைய ஜாப்தாவில் தாக்கலாயிருப்பதை அப்போது ரிசிடெண்டுதுரையவர்கள் ஒப்புக்கொண்டு மீ மீ அந்த மொயினி அயிவேஜியையும் அனுப்பிவித்திருப்பதால் அதுவே ஷெ மொயினியை நடத்த ஒரு உத்தரவாக நினைக்கவேண்டியிருக்கிறதுனுல் பெட்டிஷன் திருப்பியனுப்பப் பட்டிருக்கிறதென்று சர்க்கீல் தெரிவிக்கிறுர்.

விக்கிரம ஷு ஜூன் மீ 22வ.

இவ்வாவணம் மிக மிக மடிந்த காகிதம் கொண்டதாயுள்ளது. இதில் கூறப்பட்ட செய்தி அல்லாபண்டிகை தொடர்புடையது. 'அசேன், உசேன்' என்ற இரு முகம்மதியர் நினைவாக எழுந்ததே இவ்வல்லா பண்டிகை. இதற்கொரு பெருங்கதையுண்டு. பல ஆண்டுகளாக அல்லா பண்டிகை தமிழகத்தில் நிகழ்ந்து வருகின்றது. சத்ரபதி ஏகோஜி மகாராஜா சாகேப் அவர்கள் தங்களுடன்,

1. மேடோவர்.

அல்லாவையும், முகம்மதியக் குருமார்களையும் தஞ்சைக்குக் கொண்டுவந்ததாகச் செய்தியுண்டு. அதுமுதல் தஞ்சை மராத்தயமன்னர்கள் அல்லாபண்டிகையினையும் கொண்டாடிவந்தனர். கீழவிதியில், அரண்மனைக்கு எதிரில் 'இராஜா அல்லா' என்று சில [1]பஞ்சாக்களை வைத்து மொகரம் நாளில் வழிபட்டனர். அவைகட்கு அரண்மனை மதிப்பு இருந்தது. காலவசத்தால் அவைகள் தற்போது இல்லையாயினும், வடக்கு அலங்கம் படே உசேனி அல்லா, கீழலங்கம் சின்னி அல்லா முதலாகப் பல பஞ்சாக்கள் தஞ்சையில் இன்றும் உள்ளன. அவைகள் மொகரம் நாட்களில் வழிபாடு பெறும். இவைகளில் வடக்கு அலங்கத்தில் உள்ளதும், புராதனமானதுமான படே உசேனி அல்லா கோயிலுக்கு [2]மொயின் செய்த விபரம் தெரிகின்றது. தஞ்சை மராத்திய மன்னர்கள் மத வேறுபாடின்றி ஆண்டனர் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும். இப்படே உசேனி அல்லா கோயில் பூசை முதலான சிலவுகளுக்காக அரண்மனையார் 'மெயின்' என்ற பெயரால் பொருளளித்து வந்தனர் என்பதும், அது தொடர்ந்து நிகழ்ந்ததென்பதும் புலனாகின்றது. இவ்வல்லாகோயில் செய்தி கூறும்போது சரசுவதி மகாலுக்கு இது செய்தியை அனுப்பியதாகக் கூறப்பட்டிருக்கிறது.

தஞ்சை மராத்திய மன்னர்கள் ஆண்டகாலத்தில் நீதிமன்றங்கள் சிறப்பாக நான்கு இருந்ததாகத் தெரிகின்றது. அவையாவன (1) முத்திரித சபை. (2) தர்ம சபை. (3) நியாயதீச சபை. (4) நியாயநீசி சபை என்பன. முதல் சபை வழக்குகளைப்பெற்று முத்திரையிட்டு முடிவுசெய்வது. அதில் தீராதவைகளை தர்ம சபையில் விசாரித்து நீதி வழங்குவர். அதிலும் தீராது இருந்தவைகளை நியாயதீச சபையில் தீர விசாரித்து நீதி வழங்குவர். அதிலும் தீராத பெரு வழக்குகளை மிகத் தீவிரமாக ஆய்ந்து விசாரித்துத் தீர்ப்புக் கூறுவர். இந்தச் சபையில் நீதி வழங்க, இன்றியமையாததாகவிருந்தது சரசுவதி மகால். எந்தப் பெருவழக்குக்கும் சரசுவதி மகாலிலுள்ள மொழிவாரிப் பண்டிதர்கள் ஆராய்ந்து கூறும் சொற்களே நீதியாகமிளிர்ந்தன. ஆகவே நீதி வழங்க சரசுவதி மகால் நிலைக்களனாக இருந்தது. இதனையும் இவ்வாவணம் நிருபித்துக் காட்டுகின்றது.

## ஆவணம் எண். உகூ

தஞ்சாவூர் கவர்ண்மெண்டு யேஜண்டு துரை அவர்கள் ஆபீஸ் சற்கீல் கோவிந்தருவு அவர்களுக்கு கண்டி, கீர்த்தி சிம்மராஜா யெழுதிக்கொண்டது யென்னுடைய பெரிய தாயார் கண்டி 2-வது ராணி அவர்கள் குமாரத்திருஜரத்தின சிம்மளகமுசலாதேவி கூஅாஉகூ ஞுத்தில் சீவதெசை செய்தார்கள், யென்

1. கை உருவில் பொன், வெள்ளி முதலான உலோகங்களால் செய்யப்பட்டது. அல்லா என்ற பெயரால் வழிபடப்பெறுவது.

2. அரண்மனையார் கோயில் சிலவுக்குக் கொடுக்கும் பொருள்.

தொகப்பனுர் சுப்பாஞறனேந்திர சுவாமி ருஜா கூஅாடுகெ ஞுத்தில் சீவதெசை செய்தார். இவர்களுக்கு கோறிகட்டவேண்டியது

கூஅாஎகெஅ ஞு மேன் மீ ஈ௶கவ (தெலுங்கில் கையொப்பம்) கீர்த்தி சிம்மராஜா

இவ்வாவணம் சிறு துண்டுக்காகிதத்தில் உள்ளதால் விளக்கமாக இல்லை. செய்திகள் வெளிப்படையாக உள்ளன.

இவைகளேயன்றி தஞ்சையை ஆண்டமாரத்திய மன்னர்கள் செய்த கோயிற்பணிகள் எண்ணிலடங்கா மேலும் சில செய்திகளை நோக்குமிடத்து, அவர்கள் கையாண்ட சில ஆவணங்களினின்றும் கூறப்படும் செய்திகள்.

| மூட்டை. | அயிட்டம். | எண் | செய்தி |
|---|---|---|---|
| 31 | 4 | 7ல் | தஞ்சை நாணயக்காரசெட்டித்தெரு தொப்பாரங்கட்டிப்பிள்ளையாருக்கு பூஜை சிலவு செய்தது. |
| 31 | 4 | 8 | திருவண்ணுமலை அருணுசலேசுவர சுவாமி 1. மன்னுர்குடி இராசகோபாலசுவாமி 1. திருவையாறு ஐயாறப்பன் 1 வல்லம் சுப்பிரமணியர் 1. கீழவாசல் வெள்ளைப் பிள்ளையார் 1. இவர்கள் பூசை சிலவு. |
| 31 | 4 | 9 | திருவிடைமருதூர் மகாலிங்கம் தஞ்சைப் பெரியகோயில் [1] 108 சிவாலிங்கம் [2] ஜ்வர ஹரேசுவரர் அர்ச்சனைகள் திருவானைக் காவல் ஜம்புகேசுவரர் அகிலாண்டேசுவரி அபிஷேகம். |
| 31 | 4 | 14 | திருப்பதிக்கு விமானம் அனுப்பியிருக்கிறது சிலவு 21 சக். பழனி ராஜம்மாள் காவடி அனுப்பிய சிலவு 13 சக்கரம். |
| 31 | 4 | 45 | தஞ்சைமேலவீதி கொங்கணேசுவரருக்கு ஏகாதசிருத்திர பாராயண அபிஷேகம் வகையரு. |
| | | 46 | மேல்வீதி, பங்காருகாமாட்சிக்கு அபிஷேகம் குங்கும அர்ச்சனை சிலவு. |

1. மராத்திய மன்னர்கள் நிறுவியது.
2. கருவறையின் உள் சுற்றுப்பிரகாரத்தில் வடபால் உள்ளவர்.

| முட்டை. | அயிட்டம். | எண். | செய்தி. |
|---|---|---|---|
| 31 | 4 | 57 | சங்கர நாராயண சுவாமி வைகாசி மாத ரதோத்ஸவத்திற்கு 133 சக். |
| | | 86 | திருவண்ணுமலை அருணுசலேசுவர சுவாமிக்கு சொக்கப்பானைக்கு 10 சக்கரம். |
| 34 | | 105 | மணிகர்ணிகேச்வர சுவாமிக்கு ரதோத்சவத்திற்கு சிலவு. |
| | | 108 | பெரியகோயில் சித்திரைமாத ரதோத்சவத் திருநாளுக்குச் சிலவு 5706 சக். 2⅝ பணம். |
| | | 110 | கொங்கணேசுவர சுவாமி வைகாசி மாத ரதோத்ஸவத்திற்குச் சிலவு 1408⅝ சக். $4\frac{13}{16}$ பணம். |
| | | 111 | சங்கரநாராயண சுவாமிக்கு ஷ சிலவு 266 சக். $2\frac{1}{16}$ பணம். |
| | | 112 | ஆனந்தவல்லி தஞ்சேஸ்வர சுவாமிக்கு சித்திரை மாத ரதோத்சவத்திற்கு 478 சக். |
| | | 113 | பிரசன்ன வெங்கடேசுவர சுவாமிக்கு சித்திரைமாத ரதோத்சவத்திற்கு 443⅝ சக். $1\frac{9}{16}$ பணம். |
| | | 139 | மகாலிங்க சுவாமிக்கு உஷக்காலக் கட்டளை பூஜை நைவேத்தியம் வகையறுவுக்கு மாதம் 1க்கு 3. சக். |
| | | 141 | 108 சிவாலிங்கத்திற்கு மாதம் 1க்கு 5 சக். |
| | | 143 | ஜ்வரஹரேசுவரருக்கு மாதம் 1க்கு 2 சக். 9 பணம். |
| 14 | | 107 | திருநள்ளாறு சனீச்சுர சுவாமிக்குத் தினமும் நெய் விளக்கு வைக்க, அகல்யாபாய் நெய் விளக்கு தருமம். |
| 32 | 3 | 1 | கும்பகோணத்திலுள்ள சிவஸ்தல 16 லிங்கங்கட்கு பூஜை சிலவு. |
| 35 | | | திருவாரூர் தியாகராசாவுக்கு சிலவு. |

| மூட்டை. | அயிட்டம். | எண். | செய்தி. |
|---|---|---|---|
| 59 | 1 | 2 | பெரியகோயில் நந்திக்கு அபிஷேகம் பூஜை வகையருவுக்கு நாள் 1க்கு 3½ சக். |
| | 16 | 1 | நாகப்பட்டணம் நீலாயதாட்சியம்மன் கோயில் கும்பாபிஷேகத்திற்கு 1826-ல் ரூ. 100/= கொடுக்கப்பட்டது. |
| | | 2 | பூரி ஜெகந்நாத சுவாமிக்கு நிரந்தரமாக நித்ய பூஜைக்கு ரூ. 800/= கொடுக்கப்பட்டது. |
| 65 | 49 | 1 | லக்ஷ்மி நரசிம்மப் பெருமாளுக்குக் கோயில் கட்டுவதற்காக 3050½ சக். கொடுக்கப்பட்டிருக்கிறது. |
| | | 3 | மாரியம்மனுக்கு நித்தியப்படி 20 சக். 8 பணம். |
| 76 | 6 | 23 | வடக்குவீதி ரத்னபுரீஸ்வர சுவாமி கோயில் தேர்முட்டி கட்டுவதற்காக சிலவு ரூ 300/- |
| 112 | 128 | | 1796ல் திருவிடமருதூர் தேர் இழுக்க 6000 பேர் அனுப்பப்பட்டிருக்கிறது. |
| 116 | 21 | 1 | ஸ்ரீ பிரகதீசுவர சுவாமிக்கு அன்னபிஷேகத்துக்கு சம்பா அரிசி 15 கலம். |
| 120 | 42 | 6 | தஞ்சாவூர் கோட்டை விஜய ராமசுவாமி கோயில் கோபுரம் கட்டுவதற்காக சக். 100. |
| 149 | 9 | 3 | பெரியகோயில் 108 சிவலிங்கங்கட்கு பூஜை நிவேதனம் எப்பொழுதும் நடக்க வேண்டியதற்காக சென்னப்பட்டணம் மிஸ்த்தர் பாரிங்டன் அவர்களிடம் Deposit கொடுத்தது புலிவராகன் 5000 |
| 160 | 1 | 32 | இதில் ஷெ செய்தி குறிப்பிடப்பட்டிருக்கின்றது. |
| 169 | 1 | 4 | சிவராத்திரியன்று பெரிய கோயில் சுவாமி தரிசனத்திற்கு ஜனங்கள் வருவதால் சிவகங்கை கோட்டையின் வாசலே இரவு 12 மணி நேரமும் திரந்து வைக்கிறது. |

| முட்டை. | அயிட்டம். | எண். | செய்தி. |
|---|---|---|---|
| 169 | 16 | 3 | காமாட்சியம்மனுக்கு அற்பிசி பூரமன்று மஹாபிஷேகத்திற்கு விண்ணாற்றிலிருந்து திருமஞ்சனம் வருவதற்கு ஒரு யானையைக் கொடுக்கிறது. |
| 123 | 12 | 5 | மழை பெய்வதற்காக பெரியகோயில் நந்திக்கு அபிஷேக பூஜை நிவேதனத்திற்கு (ஜபத்திற்குக்கூட) ½ மண்டலம் தினம் 1-க்கு 3½ சக். |
| 138 | 65 | 3 | பெரியகோயில் நந்திக்கு மிளகு அபிஷேகம் 3 நாட்களுக்கு சிலவு சக். 21. |
| 105 | 46 | | 1803-ம் வருஷம் ஸ்ரீ பிரகதீசுவர சுவாமி கோயிலில் அஷ்ட்டபந்தன கும்பாபிஷேகத்திற்கு, பிள்ளையார் 133 சிவலிங்கம், சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் சிலவு 550 சக். |
| | 167 | | 1800 மன்னார்குடி ராஜகோபால சுவாமிக்கு தெப்பத்திற்காக ஹரித்ராநதி மராமத்து சிலவு 10½ சக்கரம். |
| 104 | 6 | | 1795 ஹைதர் கலாபுக்குப் பிறகு சாக்கோட்டையிலிருக்கும் அமிருதகலசநாத சுவாமிக்கு கும்பாபிஷேகம் செய்ய உத்தரவு. |
| 127 | 15 | 3 | குடமுருட்டி நதியின் பாலம் கட்டுவதற்கு சிலவு சக். 3000. |
| 121 | 13 | 8 | தியாகராஜ சுவாமி திருவிடைமருதூருக்குப் பிரயாணம் வந்தபோது கூடவந்த யானை, குதிரைகளுக்கு தீனி சிலவு சக்கரம் 38 பணம் 8½. |
| | 39 | 2 | வடவாறு வெட்ட சிலவு சக். 4000. |
| 120 | 14 | 1 | மாயூரநாத சுவாமி கோயிலின் பெரிய கோபுரத்திற்கு சக். 1000. |
| 144 | 7 | 1 | 1807-ல் ஆங்கிலேய சங்கீத புத்தகங்கள் வாங்கிய செய்தி. |

| மூட்டை. | அயிட்டம். | எண். | செய்தி |
| --- | --- | --- | --- |
| 137 | 13 | 2 | 1805-ல் காசியிலிருந்து கிரந்தங்களை எழுதி சர்க்காருக்கு அனுப்புவதற்கு திருப்பனந்தாளில் காசி தம்பிரானிடம் ரூ. 1000 அனுப்பினது சேர்ந்ததென்று தம்பிரான் எழுதிய பதில் கடிதம் |
| 137 | 15 | 1 | 1815ல் யாழ்ப்பாணத்தில் நைவேத்யேஸ்வர சுவாமிக்கு பூஜை நிவேதனத்திற்கு உபயம் சக். 31⅞. |
| 104 | 89 | | 1847-ம் வருடம் ஜூன் மாதம் 11உ திருவையாற்றிலுள்ள காவேரிப்பாலம் கட்டி முடிந்தது. மகாராஜா வந்து பாலம் திறக்க வேணுமென்று எழுதிய மனு. |
| 111 | 116 | 1 | 1849ல் மதுரை மீனுட்சி அம்மனுக்குக் கும்பாபிஷேகம் வகையருவுக்கு ரூ. 2030. |
| 76 | 6 | 8 | கோட்டூரிலிருந்து வலம்புரி சங்கொன்று ரூ. 169-க்கு வாங்கினுர்கள். |
| 116 | 4 | 1 | 1827ல் பழைய சிவகங்கைக் குளத்தின் வேலைக்கு தளவாடம், கூலி வகையருவுக்கு சக். 1000. |
| 140 | 12 | 13 | சௌ. முக்தாபாயி தஞ்சை பெரிய கோயிலில் 100000 (லட்சம்) விளக்கேற்றின சிலவு சக். 21. சௌ. அகல்யாபாய் ஷை கோயில் சுவாமிக்கு 100000 (லட்சம்) தாமரைப்பூ அருச்சனை செய்த விபரம். |

இவைபோன்ற இன்னும் அநேக செய்திகள் ஷை மோடி ஆவணங்களில் உள்ளன. யாவையும் தர விரியும் என சிலவற்றையே தரப்பட்டுள்ளன. தஞ்சை அரண்மனை சரசுவதி மகாலிலுள்ள ' அரச ஆவணங்கள் ' (Raj Records) ' இ ' (c) பிரிவைச் சார்ந்ததாகும் இவைகள், அழிப்பதற்காகவே இருந்தவை. இவைகளின் ' அ, ஆ ' (A, B) பிரிவுகள் சென்னையில் உள்ளன. அழிப்பதெற்கென உள்ள ஆவணங்களிலேயே இத்துணை சுவையான செய்திகள் உளவாயின், முதலிரண்டு பிரிவுகளில் மிகவும் இன்றியமையாத செய்திகள் இருக்கக்கூடுமென்பதில் ஐயமில்லை. ஷை முதலிரண்டு பிரிவுகளைக்கொண்ட ஆவணங்கள் தஞ்சை சரசுவதி மகாலை அடையுமாயின் மக்கள் பயனடைவர்.

வாழ்க தஞ்சை மராத்திய மன்னர்கள். வளர்க அவர்தம் வழித்தோன்றல்கள்.

கோயில்கள் முற்றும்.

வளர்க்கிறது. உடம்புக்கு வன்மையைகொடுக்கிறது, முலைப்பாலை உண்டாக்கு கிறது, மலச்சிக்கலை நீக்குகிறது. ஓய்ச்சல், தலைச்சுற்றல், வெறி, அலக்ஷிமி, ச்வாஸம் (Asthma) இருமல், அதிகநாவறட்சி, அதிகமானபசி, நாட்பட்டஜ்வரம், நீர்ச்சுருக்கு, ரத்தபித்தம் (கண், காது, மூக்கு, வாய், மலதுவாரங்கள், மயிர்க்காம்புகள், இவைகளின் வழியாக ரக்தம் கசியுதல்) இவைகளைப்போக்குகிறது.

(பசுவின்பால் கிடைக்கவசதி இல்லாதவர்கள் கால்பங்கு ஜலத்தைசேர்த்து காய்ச்சிய எருமைப்பாலை ஜீர்ணசக்திக்கேற்றபடி சாப்பிடலாம்)

அப்பொழுதே கறந்த பாலின்குணம்:—

... ... ... ... धारोष्णममृतोपमम् । (अष्टाङ्गसंग्रहः)

அப்பொழுதே கறந்தபாலை (எந்தப்பாலானாலும் சரி) கறந்தசூடு ஆறுவதற்கு முன்பே சாப்பிடுவது அமிருதத்திற்கொப்பானது.

(இதற்கு தாரோஷ்ணம் என்றுப்பெயர். தாரோஷ்ணமாகச்சாப்பிடு வதற்கு பசுவின் பால் மிகவும் சிறந்தது)

எருமைப்பாலின் குணம் :—

हितमत्यग्न्यनिद्रेभ्यो गरीयो माहिषं हिमम् । (अष्टाङ्गसंग्रहः)

எருமைப்பால் அதிக பசி உள்ளவர்களுக்கும், ஆழ்ந்த தூக்கமில்லாதவர் களுக்கும் இதமானது. இது சுகமாக ஜீர்ணமாகக்கூடியதல்ல, குளுமையானது.

வெள்ளாட்டுப்பாலின் குணம் :—

छागं कषायमधुरं शीतं ग्राहि पयो लघु ।
रक्तपित्तातिसारघ्नं क्षयकासज्वरापहम् ॥ (चरकसंहिता)

வெள்ளாட்டுப்பால் துவர்ப்பு, இனிப்பு இந்த சுவைகளுடையது, குளுமை யானது, இளகிப்போகும் மலத்தைக்கட்டக்கூடியது சுகமாக ஜீர்ணமாகக்கூடியது ரக்தபித்தம் (கண், காது, மூக்கு, வாய், மலதுவாரங்கள் மயிர்க்காம்புகள், இவை வழியாக ரக்தம் கசியுதல்) பேதி, க்ஷயரோகம், இருமல், ஜ்வரம் இவைகளைப் போக்குகிறது.

இதுச்வாஸரோகத்திற்கும் (Asthma) ஏற்றது இதை துணியில் வடிகட்டி, காய்ச்சி, சிறிது சூடாக இருக்கும் போதே பருகவேண்டும்)

தேனின் குணம் :—

चक्षुष्यं छेदि तृड्श्लेष्मविषहिध्मास्रपित्तनुत् ।
कुष्ठमेहकृमिच्छर्दिश्वासकासातिसारजित् ॥

व्रणशोधनसन्धानरोपणं वातलं मधु ।
रूक्षं कषायमधुरं ... ... ... ... ... ॥
नानाद्रव्यात्मकत्वाच्च योगवाहि परं मधु ॥ (अष्टाङ्गसंग्रहः)

தேன் கண்களுக்கு இதமானது, கட்டி இருக்கும் கபம் முதலியவற்றை அறுத்து வெளியேற்றுகிறது, தண்ணீர் தாஹம், கபரோகம், விஷம், விக்கல், ரக்தபித்தம் (கண், காது, மூக்கு, வாய், மலத்துவாரங்கள், மயிர்க்காம்புகள், இவைகளின் வழியாக ரக்தம் கசியுதல்) குஷ்டம், பிரமியம் (Diabetes) கிருமிரோகம், வாந்தி, ச்வாஸம் (Asthma) இருமல், பேதி, இவைகளைப்போக்குகிறது, விரணத்தில் சீழ் முதலியது உண்டாகாதபடி அதை சுத்தம் செய்கிறது, பிளவுகண்ட மாம்ச பாகங்களையும், ஒடிந்துபோன எலும்புகளையும் ஒட்டும்படி செய்கிறது. வாயுவை அதிகப்படுத்துகிறது. வரட்சியானது, துவர்ப்பு, இனிப்புச்சுவைகளை உடையது; தேன் பலவிதமான ரஸ வீர்யங்களையுடையதான மலர்களிலிருந்து சேமிக்கப்படுவதால் "யோகவாஹி" (தான் எந்தப்பொருளுடன் சேருகிறதோ அந்தப்பொருளுடைய குணத்தை அதிகப்படுத்தும் தன்மையை அதிகமாக கொண்டுள்ளது) பொருளாக இருக்கிறது.

(தேனில் சுண்ணும்பு சத்தும் (Calcium) இரும்புச்சத்தும் (Iron) உள்ளதாக மேல் நாட்டு விஞ்ஞானிகள் கூறியுள்ளனர்)

தேனை உபயோகிக்கக் கூடாத நிலை:—

उष्णमुष्णार्तमुष्णे च युक्तं चोष्णैर्निहन्ति तत् । (अष्टाङ्गसंग्रहः)

தேன் சுடவைக்கப்பட்டு உட்கொள்ளப்பட்டாலும், சூடு அதிகமாகவுள்ள மனிதனால் உட்கொள்ளப்பட்டாலும், வெப்பநிலையில் உட்கொள்ளப்பட்டாலும், சூடானப்பொருளுடன் கூட்டி உட்கொள்ளப்பட்டாலும் உயிரைவாங்கும். (வாந்தி முதலியவற்றை உண்டாக்கும் முறைகளில் தேன் சூடான பொருட்களுடன் சேர்க்கப்பட்டு உட்கொள்ளப்பட்டாலும் உடனே வெளிவருவதால் கெடுதியை உண்டாக்காது).

மாதுளை கனியின் குணம்:—

उद्रिक्तपित्तान् जयति त्रिदोषान् स्वादु दाडिमम् ।
पित्ताविरोधि नात्युष्णमम्लं वातकफापहम् ॥
सर्वं हृद्यं लघु स्निग्धं ग्राहि रोचनदीपनम् । (अष्टाङ्गसंग्रहः)

तत्तु स्वादु त्रिदोषघ्नं तृड्दाहज्वरनाशनम् ।
हृत्कण्ठमुखगन्धघ्नं तर्पणं शुक्रलं लघु ॥

कषायानुरसं ग्राहि स्निग्धं मेधाबलावहम् । (भावप्रकाशः)

இனிப்புச்சுவையுள்ள மாதுளை பித்தத்தை அதிகமாகக் கொண்ட ஸன்னி பாததோஷத்தைப் போக்குகிறது. புளிப்புச்சுவையுள்ள மாதுளை பித்தத்தை அதிகப்படுத்துவதல்ல, அதிகவெப்பத்தையும் உண்டாக்குவதல்ல, வாயு, கபம் இவைகளைப்போக்குகிறது. இரண்டுவிதமான மாதுளைக் கனிகளும் இதயத்திற்கு நன்மை செய்பவை. சுகமாக ஜீர்ணமாகக்கூடியவை. எண்ணெய்ப்பசையுள்ளவை. இளகிப்போகும் மலத்தைக்கட்டும் இயல்புடையவை. ஆகாரத்தில் ருசியை உண்டுபண்ணுகின்றன. பசித்தீயைத் தூண்டுகின்றன. இனிப்பு சுவையுள்ள மாதுளை தண்ணீர்தாகம், ஜ்வரம், இதயநோய், தொண்டைநோய், வாய் துர்நாற்றம் இவைகளைப்போக்குகிறது. உடம்பைத்தேற்றுகிறது, விந்துவை அதிகப்படுத்துகிறது.

இந்துப்பின் குணம் :—

चक्षुष्यं सैन्धवं हृद्यं रुच्यं लघ्वग्निदीपनम् ।
स्निग्धं समधुरं वृष्यं शीतं दोषघ्नमुत्तमम् ॥ ( सुश्रुतसंहिता )

இந்துப்பு கண்களுக்கும் இதயத்திற்கும் ஹிதமானது. ஆகாரத்தில் ருசியை உண்டுபண்ணுகிறது. சுகமாக ஜீர்ணமாகக்கூடியது, பசித்தீயைத்தூண்டுகிறது, எண்ணெய்ப்பசையுள்ளது, சிறிது இனிப்பானது, ஆண்மையைவளர்க்கிறது, குளுமையானது, மூன்று தோஷங்களையும் போக்குகிறது, உப்புவகையில் சிறந்தது.

பொன்னுங்கண்ணியின் குணம் :—

पत्तूरो दीपनस्तिक्तः प्लीहार्शःकफवातजित् । ( अष्टाङ्गहृदयम् )

பொன்னுங்கண்ணி பசித்தீயைத் தூண்டுகிறது, கைப்புச்சுவையுள்ளது. மண்ணீரலைப்பற்றியநோய், மூலம், கபம், வாயு இவைகளைப்போக்குகிறது (இது கண்ணுக்கும், கூந்தலுக்கும் நலம் செயுயும்)

கரிசலாங்கண்ணியின் குணம் :—

भृङ्गारः कटुकस्तीक्ष्णो रूक्षोष्णः कफवातनुत् ।
केश्यस्त्वच्यः कृमिश्वास कासशोथामपाण्डुनुत् ॥
दन्त्यो रसायनो बल्यः कुष्ठनेत्रशिरोऽर्तिनुत् । (भावप्रकाशः)

கரிசலாங்கண்ணி கார்புச்சுவையுள்ளது. தீக்ஷ்ணமானது வரட்சியானது வெப்பத்தை உண்டாக்கக்கூடியது. கபத்தையும், வாயுவையும் போக்குகிறது. கூந்தலுக்கும் சர்மத்திற்கும் நலம் செய்யும். கிருமி, ச்வாஸம் (Asthma) இருமல்,

வீக்கம், அஜீர்ணம், பாண்டு (Anaemia) குஷ்டம், கண்நோய், மண்டைநோய் இவைகளைப்போக்கும், பற்களுக்கு இதமானது, திரை, நரை, இவைகளைப்போக்கி நோயற்ற நடுவயதை நிலை நிறுத்துகிறது, உடம்பைதேற்றுகிறது.

கருவேப்பிலையின் குணம் :—

ग्राहि शस्तं विशेषेण ग्रहण्यर्शोविकारिणाम् ।
कालशाकं तु कटुकं दीपनं गरशोफजित् ॥ (चरकसंहिता)

கருவேப்பிலை இளகிப்போகும் மலத்தைக்கட்டும், நாட்பட்டபேதி, மூலம் இந்த நோய்கள் உள்ளவர்களுக்கு மிகவும் இதமானது, கார்புச்சுவையுள்ளது, பசித்தீயைத்தூண்டுகிறது. இடுவிஷம், வீக்கம் இவைகளைப்போக்குகிறது.

காராக் கருணையின் குணம் :—

दीपनः सूरणो रुच्यः कफघ्नो विशदो लघुः ।
विशेषादर्शसां पथ्यः ... ... ... ... ॥ (अष्टाङ्गहृदयम्)
... ... ... प्लीहगुल्मविनाशनः ।
सर्वेषां कन्दशाकानां सूरणः श्रेष्ठ उच्यते ।
दद्रूणां कुष्ठिनां रक्तपित्तिनां न हितो हि सः ॥ (भावप्रकाशः)

காராக்கருணை பசித்தீயைத் தூண்டுகிறது. ஆகாரத்தில் ருசியை உண்டு பண்ணுகிறது, கபத்தை கண்டிக்கும், பசையில்லாதது, சுகமாக ஜீர்ணமாகக் கூடியது. மூலரோகம் உள்ளவர்களுக்கு மிகவும் இதமானது. மண்ணீரலை பற்றியநோய், குல்மம் இவைகளைப்போக்குகிறது, கிழங்கு வகைகளுள் காராக் கருணை மிகவும் சிறந்தது, இது படை, குஷ்டம், ரக்தபித்தம் (கண், காது, மூக்கு, வாய், மலதுவாரங்கள், மயிர்க்காம்புகள் இவைகளின் வழியாக ரக்தம் கசியுதல்) இந்த நோய்கள் உள்ளவர்களுக்கு நல்லதல்ல.

மணத்தக்காளியின் குணம் :—

काकमाची त्रिदोषघ्नी स्निग्धोष्णा स्वरशुक्रदा ।
तिक्ता रसायनी शोथकुष्ठार्शोज्वरमेहजित् ।
कटुर्नेत्रहिता हिक्काच्छर्दिहृद्रोगनाशिनी ॥ (भावप्रकाशः)

மணத்தக்காளி மூன்று தோஷங்களையும் போக்குகிறது. எண்ணெய்ப் பசையுள்ளது, வெப்பத்தை உண்டுபண்ணும். நல்ல குரலை தருகிறது, விந்துவை அதிகப்படுத்துகிறது. கசப்பு, கார்புச்சுவைகளுள்ளது, திரை, நரை, இவைகளைப்

போக்கி நோயற்ற நடுவயதை நிலை நிறுத்துகிறது, வீக்கம், குஷ்டம், மூலம், ஜ்வரம், பிரமியம் (Diabetes) விக்கல், வாந்தி, இதயநோய் இவைகளைப்போக்குகிறது. கண்களுக்கு இதமானது.

புளியாரையின் குணம் :—

दीपनी चोष्णवीर्या च ग्राहिणी कफमारुते ।
प्रशस्यतेऽम्लचाङ्गेरी ग्रहण्यर्शोहिता च सा ॥ (चरकसंहिता)

புளியாரை பசித்தீயைத்தூண்டுகிறது, செ[illegible]முண்டாக்குகிறது, இளகிப்போகும் மலத்தை கட்டும் இயல்புடையது, கபம், வாயு, இவைகளுக்குச் சம்பந்தமான நோய்களில் இதமானது, கிராணி (நாட்பட்டபேதி) மூலம், இவைகளுக்கும் இதமானது.

உள்ளிப்பூண்டின் குணம் :—

स्निग्धोष्णतीक्ष्णः कटुपिच्छिलश्च
गुरुः सरः स्वादुरसश्च बल्यः ।
वृष्यश्च मेधास्वरवर्णचक्षु-
र्भग्नास्थिसन्धानकरो रसोनः ॥

हृद्रोगजीर्णज्वरकुक्षिशूल-
विबन्धगुल्मारुचिकासशोफान् ।
दुर्नामकुष्ठानलसादजन्तु-
समीरणश्वासकफांश्च हन्ति ॥ (सुश्रुतसंहिता)

न पतन्ति स्तनाः स्त्रीणां नित्यं लशुनसेवनात् ।
न रूपं भ्रश्यते चासां न प्रजा न बलायुषी ॥

दृढमेधाविदीर्घायुर्दर्शनीयप्रजा भवेत् । (काश्यपसंहिता)

உள்ளிப்பூண்டு எண்ணெய்ப்பசையுள்ளது, தீக்ஷ்ணமானது இனிப்பு, கார்ப்புச்சுவைகளுள்ளது. பிசுபிசுப்புள்ளது, எளிதில் ஜீர்ணமாகாதது, உடம்பில் பரவும் தன்மையுள்ளது உடம்பைத் தேற்றுகிறது, ஆண்மையை வளர்க்கிறது, புத்தியை வளர்க்கிறது, நல்ல குரலைத்தருகிறது. சர்மத்திற்கு ஒளியை உண்டாக்குகிறது, கண்களுக்கு இதமானது, ஒடிந்துபோன எலும்புகளை ஒட்டும்படி செய்கிறது. இதயநோய், நாட்பட்ட ஜ்வரம், வயிற்றுவலி, மலச்சிக்கல், குல்மம் (வயிற்றில் உண்டாகும் ஒருவிதக்கட்டி Abdominal Tumour) ருசியின்மை,

இருமல், வீக்கம், மூலம் (Piles) குஷ்டம், பசித்தீக்குறைவு, கிருமி, வாயு, ச்வாஸம் (Asthma) கபம் இவைகளைப்போக்குகிறது. உள்ளிப்பூண்டை உட்கொள்ளுவதால் பெண்களின் முலைகள் சரிவதில்லை, அழகு, பிரஜை, வலுவு, ஆயுள் இவைகளும் சிதறுவதில்லை. வலுவு, அறிவு, நீண்ட ஆயுள், அழகு, இவற்றுடன் கூடிய குழந்தையையுடையவளாகவும் ஆகின்றாள்.

வெங்காயத்தின் குணம்:—

श्लेष्मलो मारुतघ्नश्च पलाण्डुर्न च पित्तहृत् ।
आहारयोगी बल्यश्च गुरुर्वृष्योऽथ रोचनः ॥ (चरकसंहिता)

कफवातार्शसां पथ्यः स्वेदेऽभ्यवहृतौ तथा । (अष्टाङ्गहृदयम्)

வெங்காயமானது கபத்தை அதிகப்படுத்தும், வாயுவை கண்டிக்கும். பித்தத்தைப் போக்குவதில்லை, சாப்பாட்டில் உபயோகிக்கக்கூடியது, உடம்புக்கு வலுவைக்கொடுக்கிறது. எளிதில் ஜீர்ணமாகக்கூடியதல்ல, ஆகாரத்தில் ருசியை உண்டாக்குகிறது, கபத்தினுலும், வாதத்தினுலும் உண்டான மூலரோகத்தில் ஒற்றடம் கொடுப்பதற்கும், உட்கொள்ளுவதற்கும், இதமானது.

சாம்பற்பூசனியின் குணம்:—

कूष्माण्डं बृंहणं वृष्यं गुरु पित्तास्रवातनुत् ।
वस्तिशुद्धिकरं चेतोरोगहृत् सर्वदोषजित् ॥ (भावप्रकाशः)

சாம்பற்பூசனி உடம்பை தேற்றுகிறது, ஆண்மையை வளர்க்கிறது. எளிதில் ஜீர்ணமாகக்கூடியதல்ல, பித்தம், ரக்தம், வாயு, இவைகளுக்கு சம்மந்தமான வியாதிகளைப்போக்கும், மூத்திரப்பையை சுத்தி செய்யும். மனத்திற்கு சம்பந்தமான நோய்களையும், எல்லா தோஷங்களையும் போக்குகிறது.

தேங்காயின் குணம்:—

नारिकेलफलं शीतं दुर्जरं वस्तिशोधनम् ।
विष्टम्भि बृंहणं बल्यं वातपित्तास्रदाहनुत् (भावप्रकाशः)

தேங்காய் குளுமையானது, எளிதில் ஜீர்ணமாகக்கூடியதல்ல, மூத்திரப்பையை சுத்தம் செய்கிறது, வயிற்றுப்பொருமலை உண்டாக்குகிறது, உடம்பை தேற்றுகிறது. வன்மையைத்தருகிறது. வாயு, பித்தம், ரக்தம் இவற்றிற்கு சம்பந்தமான நோய்கள் எரிச்சல் இவற்றைப் போக்குகிறது.

முட்டையின் குணம்:—

धार्तराष्ट्रचकोराणां दक्षाणां शिखिनामपि ।
चटकानां च यानि स्युरण्डानि च हितानि च ॥

क्षीणरेतःसु कासेषु हृद्रोगेषु क्षतेषु च
मधुराण्यविदाहीनि सद्यो बलकराणि च ॥ (चरकसंहिता)

அன்னப்பறவை, சகோரபக்ஷி, கோழி, மயில், குருவி இவற்றின் முட்டைகள் விந்து குறைவு, இருமல், இதயநோய், க்ஷயரோகம் இவைகள் உள்ளவர்களுக்கு இதமானவை. இனிப்புச்சுவையுள்ளவை, நெஞ்செரிவை உண்டு பண்ணுதவை, உடம்புக்கு உடனே வலுவையும் உண்டாக்கக்கூடியவை.

காய்கறிகளைச் சமைப்பதில் சிறந்தமுறை—

स्विन्नं निष्पीडितं शाकं हितं स्यात्स्नेहसंस्कृतम् । (सुश्रुतसंहिता)

நன்ருக வேகவைக்கப்பட்டதும், நன்ருகப் பிழியப்பட்டதும், நெய், நல்லெண்ணெய் முதலியவற்ருல் பக்குவம் செய்யப்பட்டதுமான காய்கறிகளின் சமையல் இதமானது.

(மேல் கூறியபடி செய்யப்பட்ட காய்கறி சமையல் சுகமாக ஜீர்ணமாகிறது, உடம்புக்கு நலத்தைக் கொடுக்கிறது, வேகவைக்கப்படாமல் வதக்கப்பட்டதும், பொரிக்கப்பட்டதுமான காய்கறிசமையல் சுகமாக ஜீர்ணமாகாமல் பல்வேறு நோய்களை உண்டாக்கக்கூடுமென்று நம்நாட்டு மருத்துவ ஆசிரியர்களின் கருத்து.

இன்று நவீன மருத்துவ விஞ்ஞானிகள் காய்கறிகளை அதிக நேரம் வேகவைப்பதாலும், கொதித்த நீரை அகற்றுவதாலும், அவற்றிலுள்ள சத்துப் பொருட்கள் (வைட்டமின்) குறைந்துவிடுகின்றன. ஆகவே இவைகளை பசுமையாகவே சாப்பிடுவதால் தான் முழுபலனை அடைய முடியும் என்று கூறுகிருர்கள், இதற்கு உதாரணமாக மாடுபோன்ற பிராணிகளை காட்டுகிருர்கள், ஆனுல் மனிதர்களுக்குள்ள ஜீர்ணசக்தியும் மாடுபோன்ற பிராணிகளுக்குள்ள ஜீர்ண சக்தியும் ஒரேவிதமானதா? என்பதுதான் ஆராயவேண்டியிருக்கிறது.)

உபயோகிக்கத்தகாத இலைக்கீரை :—

कर्कशं परिजीर्णं च कृमिजुष्टमदेशजम् ।
वर्जयेत्पत्रशाकं तद्यदकालविरोहि च ॥ (सुश्रुतसंहिता)

முற்றிப்போனதும், பழையதாகி விட்டதும், பூச்சிப்பிடித்ததும், அசுத்தமான இடத்தில் பயிராகியதும், அததற்கேற்ற காலத்தைத் தவிர்த்து மற்ற காலத்தில் உண்டானதுமான இலைக்கீரையை உபயோகிக்கக்கூடாது. (புடலங்காய் முதலிய கொடிகளின் காய்களும் கீரைவகையைச்சேர்ந்தவை.)

உபயோகிக்கத்தகாத கிழங்கு :—

बालं ह्यनार्तवं जीर्णं व्याधितं क्रिमिभक्षितम् ।
कन्दं विवर्जयेत्सर्वं यो वा सम्यङ्न रोहति ॥ (सुश्रुतसंहिता)

மிகவும் இளசானதும். அதற்கேற்ற காலத்தை தவிர்த்து மற்றகாலத்தில் உண்டானதும். பழையதாகி விட்டதும். நோயுள்ளதும், பூச்சிபிடித்ததுமான கிழங்கை உபயோகிக்கக்கூடாது. அவ்வாறே முளைக்கச்சக்தியற்ற கிழங்கையும் உபயோகிக்கக்கூடாது. (முள்ளங்கியை மட்டும் இளசானதாகவே உபயோகிக்க வேண்டுமென்றும், காய்ந்துபோனதையும் உபயோகிக்கலாமென்றும், இளம் முள்ளங்கியின் குணம், முள்ளங்கிவற்றலின் குணம், என்னும் தலைப்புகளில் கூறப் பட்டுள்ளது 41-வது பக்கம் காண்க).

உபயோகிக்கத் தகாத கனி :—

व्याधितं कृमिजुष्टं च पाकातीतमकालजम् ।
वर्जनीयं फलं सर्वमपर्यागतमेव च ॥ (सुश्रुतसंहिता)

நோயுள்ளதும், பூச்சி பிடித்ததும், மிகவும் பழுத்துப்போனதும், அதற்கேற்ற காலத்தைத்தவிர்த்து மற்றகாலத்தில் உண்டானதும், நன்ருகப் பழுக்காததுமான கனியை விட்டுவிடவேண்டும்.

உபயோகிக்கத்தக்க கனி :—

फलेषु परिपक्वं यत् गुणवत्तदुदाहृतम् ।
बिल्वादन्यत्र विज्ञेयमामं तद्धि गुणोत्तरम् ॥ (सुश्रुतसंहिता)

கனிகளில் வில்வபழத்தைத் தவிர்த்து மற்றது நன்ருகப் பழுத்ததுதான் குணமுள்ளது. வில்வத்தின் பிஞ்சுதான் குணத்தில் சிறந்தது.

திராக்ஷை முதலியவை காய்ந்துபோனவைதான் சிறந்ததென்பது—

द्राक्षाबिल्वशिवादीनां फलं शुष्कं गुणाधिकम् । (भावप्रकाशः

திராக்ஷை, வில்வம், கடுக்காய் மரம் முதலியவற்றின் கனி நன்ருகப் பழுத்து உலர்ந்தது குணத்தில் சிறந்தது.

தினந்தோறும் உபயோகிக்கத்தகாத உணவுப்பொருட்கள் :—

किलाटदधिकूचीकाक्षारशुक्ताममूलकम् ।
कृशशुष्कवराहाविगोमत्स्यमहिषामिषम् ॥

माषनिष्पावशालूकबिसपिष्टविरूढकम् ।
शुष्कशाकानि यवकान् फाणितं च न शीलयेत् ॥ (अष्टाङ्गहृदयम्)

திரிந்துபோன்பால், தயிர், தயிரையோ மோரையோ பாலில் சேர்த்து பக்குவம் செய்யப்பட்டது, யவக்ஷாரம் முதலிய க்ஷாரச்சரக்குகள், புளிப்பான ஒருவித

மது, பச்சை முள்ளங்கி, இளைத்த உடம்புள்ள மிருகங்களின் மாமிசம், உலர்ந்து போன மாமிசம், பன்றி, செம்மறியாடு, பசு, மீன், எருமை, இவற்றின் மாமிசம், உளுந்து, மொச்சை, அல்லிக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, மாப்பண்டம், முளைத்த தான்யம், உலர்ந்துபோன காய்கறிகள், (வற்றல்) ய்வகம் (ஒருவிதமான சிறிய கோதுமை) தேன்பாகு, இவற்றை தினப்படி உபயோகிக்கக்கூடாது.

(எப்போதாவது ஒரு சமயத்தில் மேல் கூறியவற்றை உபயோகிப்பதால் கெடுதல் உண்டாகாது. தயிர், உளுந்து இவைகளை வாரத்தில் ஒருமுறை அல்லது இரண்டுமுறை உபயோகித்து வரலாம்.

பசுவின் தயிரின் குணம் :—

रोचनं दीपनं वृष्यं स्नेहनं बलवर्धनम् ।
पाकेऽम्लमुष्णं वातघ्नं मङ्गल्यं बृंहणं दधि ॥

पीनसे चातिसारे च शीतके विषमज्वरे ।
अरुचौ मूत्रकृच्छ्रे च कार्श्ये च दधि शस्यते ॥ (चरकसंहिता)

பசுவின் தயிர் ருசியை உண்டுபண்ணுகிறது, பசித்தீயைத் தூண்டுகிறது. ஆண்மையை வளர்க்கிறது, உடம்பில் நெய்ப்பசையை உண்டுபண்ணுகிறது, வன்மையை கொடுக்கிறது, ஜீர்ணமாகிய பின்பு புளிப்புச்சுவை உள்ளது. வெப்பத்தை உண்டாக்குகிறது, மங்களகரமானது, உடம்பைத் தேற்றுகிறது, ஜலதோஷம், பேதி, குளிருடன் உண்டாகும் முறை ஜ்வரம், ருசியின்மை, நீர்ச் சுருக்கு உடம்பு இளைப்பு இவற்றில் சிறந்தது.

எருமைத் தயிரின் குணம் :—

विपाके मधुरं वृष्यं वातपित्तप्रसादनम् ।
बलासवर्धनं स्निग्धं विशेषाद्दधि माहिषम् ॥ (सुश्रुतसंहिता)

எருமைத்தயிர் ஜீர்ணமாகிய பின்பும் இளிப்புச்சுவையுள்ளது. ஆண்மையை வளர்க்கிறது. வாயு, பித்தம், இவற்றை குறைக்கிறது. கபத்தை அதிகப்படுத்துகிறது. அதிகமாக நெய்ப்பு உள்ளது.

தயிரை உபயோகிப்பதில் நியமம் :—

न नक्तं दधि भुञ्जीत न चाप्यघृतशर्करम् ।
नामुद्गयूषं नाक्षौद्रं नोष्णं नामलकैर्विना ॥ (चरकसंहिता)

न रात्रौ दधि भुञ्जीत न च निर्लवणं तथा । (भावप्रकाशः)

தயிரை இரவில் உபயோகிக்கக்கூடாது. இதை நெய், சர்க்கரை, பயத்தம் கஞ்சி, தேன், நெல்லிக்காய் இவற்றில் ஏதேனும் ஒன்ருேடு சேர்க்காமலும், சுடவைத்தும், உபயோகிக்கக்கூடாது. அவ்வாரே தயிறை உப்புடன் சேர்க்காமலும் உபயோகிக்கக்கூடாது.

தயிரை உபயோகிக்கத்தகாத நிலைமை :—

शरद्ग्रीष्मवसन्तेषु प्रायशो दधि गर्हितम् ।
रक्तपित्तकफोत्थेषु विकारेष्वहितं च तत् ॥ (चरकसंहिता)

தயிரை சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஐப்பசி, கார்த்திகை இந்தமாதங்களிலும், ரக்தம், பித்தம், கபம், இவற்றின் சம்பந்தமான நோய்களிலும் உபயோகிக்கக்கூடாது,

உளுந்தின் குணம் :—

वृष्यः परं वातहरः स्निग्धोष्णमधुरो गुरुः ।
बल्यो बहुमलः पुंस्त्वं माषः शीघ्रं ददाति च ॥ (चरकसंहिता)

भिन्नमूत्रमलः स्तन्यो मेदःपित्तकफप्रदः ।
गुदकीलार्दितश्वासपक्तिशूलानि नाशयेत् ॥ (भावप्रकाशः)

உளுந்து ஆண்மையை வளர்க்கிறது, வாயுவை போக்குவதில் சிறந்தது, எண்ணெய்ப்பசையுள்ளது, வெப்பத்தை உண்டாக்குகிறது, இனிப்புச்சுவையுள்ளது. சுகமாக ஜீர்ணமாகக் கூடியதல்ல, வன்மையை அளிக்கிறது, மலத்தை அதிகப்படுத்துகிறது, விந்துவை உடனே வளர்க்கிறது, மலம், மூத்திரம் இவைகளை வெளியேற்றுகிறது முலைப்பாலை வளர்க்கிறது, கொழுப்பு பித்தம், கபம் இவைகளை விருத்திசெய்கிறது, மூலம் (Piles) அர்திதம் (முகத்தில் உணர்ச்சியின்றி வாய் கோணலாகிவிடும் நோய் (Facial Paralysis), ச்வாஸம் (Asthma), உணவு ஜீர்ணமாகும்போது உண்டாகும் வயிற்றுவலி, இவைகளைப்போக்குகிறது.

மாப்பண்டம் முதலியவற்றை உண்பதில் நியமம் :—

तण्डुलान् पृथुकांश्चापि सर्वान् पिष्टमयांस्तिलान् ।
न जातु भुक्तवान् खादेन्मात्रां खादेद्बुभुक्षितः ॥ (भेलसंहिता)

द्विगुणं च पिबेत्तोयं सुखं सम्यक् प्रजीर्यति । (चरकसंहिता)

அரிசி, (பொறிமாவு) அவல், எல்லாவிதமான மாப்பண்டங்கள், எள்ளு, இவற்றை போஜனத்திற்கு பின்பு சாப்பிடக்கூடாது. பசியுள்ளவன் இவைகளை

ஜீரணசக்திக்குத் தகுந்த அளவில் சாப்பிடவேண்டும், இவ்வாறு மாப்பண்டம் முதலியவற்றை சாப்பிடும்போது இரண்டு மடங்கு ஜலத்தைப் பருகவேண்டும். இதனுல் இந்த உணவு எளிதில் நன்ருக ஜீர்ணமாகின்றது.

(பொறி மாவு முதலியவற்றை நெய், சர்க்கரை இவற்றுடன் கூட்டியே சாப்பிடவேண்டும், இவற்றை இரவில் சாப்பிடுவதும் நல்லதல்ல.)

பொரிமாவின் குணம் :—

मधुरा लघवः शीताः सक्तवः शालिसंभवाः ।
ग्राहिणो रक्तपित्तघ्नास्तृष्णाच्छर्दिज्वरापहाः ॥ (चरकसंहिता)

कण्ठनेत्रामयक्षुत्तृट्श्रमच्छर्दिव्रणापहाः ।
सक्तवो लघवः पानात्सद्य एव बलप्रदाः ॥ (अष्टाङ्गसंग्रहः)

பொறிமாவு இனிப்பானது, சுகமாக ஜீர்ணமாகக்கூடியது, குளுமையானது, மலத்தைக்கட்டக்கூடியது, ரக்தபித்தம் (கண், காது, மூக்கு, வாய், மல துவாரங்கள், மயிர்க்காம்புகள் இவற்றின் வழியாக ரக்தம் கசியுதல்) தண்ணீர் தாஹம், வாந்தி, ஜ்வரம், தொண்டை நோய், கண் நோய், பசி, ஒய்ச்சல், புண் இவைகளைப் போக்குகிறது. தண்ணீரில் கலக்கிக் குடிப்பதால் உடம்புக்கு உடனே பலமுண்டாக்குகிறது.

அவலின் குணம் :—

पृथुका गुरवः स्निग्धाः बृंहणाः कफवर्धनाः ।
बल्याः सक्षीरभावात्तु वातघ्ना भिन्नवर्चसः ॥ (सुश्रुतसंहिता)

அவல் சுகமாக ஜீர்ணமாகக்கூடியதல்ல. எண்ணெய்ப் பசையுள்ளது. உடம்பை தேற்றுகிறது. கபத்தை அதிகப்படுத்துகிறது. உடம்புக்கு வலுவை உண்டுபண்ணுகிறது. அவுல் பாலுள்ளதானபடியால் வாயுவை போக்குகிறது. மலச்சிக்கலை நீக்குகிறது.

நெற்பொறியின் குணம்:—

लाजास्तृट्च्छर्द्यतीसारमेहमेदःकफच्छिदः ।
कासपित्तोपशमना दीपना लघवो हिमाः ॥ (अष्टाङ्गसंग्रहः)

நெல் பொறி தண்ணீர் தாகம், பேதி, நீரிழிவு, ஊழச்சதை, கபம், இருமல், பித்தம் இவைகளைப்போக்குகிறது. பசித்தீயைத் தூண்டுகிறது, சுகமாக ஜீர்ணமாகும். குளிர்ச்சியை உண்டுபண்ணுகிறது.

நெல் பொறிமாவின் குணம்:—

तृट्छर्दिदाहघर्मार्दिनुदस्तत्सक्तवो मताः ।
रक्तपित्तहराश्चैव दाहज्वरविनाशनाः ॥ (सुश्रुतसंहिता)

நெல் பொறி மாவு தண்ணீர்தாகம், வாந்தி, எரிச்சல், வெப்பம், ரக்த பித்தம் (கண், காது, மூக்கு, வாய், மலதுவாரங்கள், மயிர்க்காம்புகள், இவற்றின் வழியாக ரக்தம் கசியுதல்) உடம்பு எரிச்சலுடன் கூடிய ஜ்வரம் இவைகளைப் போக்குகிறது.

புளிப்புச் சுவையுள்ளவைகளையும் கனிகளையும் பாலுடன் சாப்பிடக்கூடா தென்பது:—

विरुद्धमम्लं पयसा सह सर्वं फलं तथा । (अष्टाङ्गहृदयम्)

புளிப்புச்சுவையுள்ள கெட்டியான பொருட்களும், திரவமான பொருட்களும் பாலுடன் உபயோகிப்பதற்குத் தகாதவை. அவ்வாறே எல்லாக்கனிகளும் பாலுடன் உட்கொள்ளத்தகாதவையாகும்.

(பாலை சாப்பிட்ட பிறகும் மேல் கூறியவற்றை உட்கொள்ளக்கூடாது. இப்பொழுது பால், பழம் இவற்றை ஒரே சமயத்தில் ஆகாரமாக உட்கொள்ளும் பழக்கம் இருந்து வருகிறது. இது உடனடியாக எவ்வித கெடுதியையும் உண்டாக்குவதில்லை என்றாலும் பிற்காலத்தில் தீமையை உண்டாக்கக்கூடும்.

கொள் முதலியவற்றை பாலுடன் உட்கொள்ளக்கூடாதென்பது:—

तद्वत्कुलत्थवरककङ्गुवल्लमकुष्ठकाः । (अष्टाङ्गहृदयम्)

அவ்வாறே கொள், வரகம் என்கின்ற நெல், கம்பு, வல்லமென்கிற ஒருவித பருப்பு, காட்டுப்பயறு இவைகளும் பாலுடன் உட்கொள்ளத்தகாதவை.

முள்ளங்கி, பசுங்கீரை வகைகள் இவற்றை உட்கொண்டு பாலை குடிக்கக் கூடாதென்பது:—

भक्षयित्वा हरितकं मूलकादि पयस्त्यजेत् । (अष्टाङ्गहृदयम्)

முள்ளங்கி, பசுமையான கீரை வகைகள் இவற்றை உட்கொண்ட உடனே பாலை குடிக்கக்கூடாது.

பாலுடன் உப்பை உட்கொள்ளக்கூடாதென்பது:—

क्षीरेण लवणं नाभ्यवहरेत् (अष्टाङ्गसंग्रहः)

பாலுடன் உப்பை கூட்டி உட்கொள்ளக்கூடாது.

தேரர் அருளிச்செய்த

# சிறுநீர்க்குறி சோதனை

ஆசிரியர் :

**டாக்டர் ஆ. சண்முகவேலன்**, *M. A., B. O. L.*,
சித்த மருத்துவ ஆராய்ச்சி ஆபிசர்,
மத்திய அரசாங்க
இந்திய வைத்திய நூல் ஆராய்ச்சித் துறை,
சரசுவதி மகால், தஞ்சை.



தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலைய நிர்வாகக் குழுவுக்காக
கௌரவக் காரியதரிசி
**திரு. ஓ. ஏ. நாராயணசுவாமி**, *B. A., B. L.*, அவர்களால்
வெளியிடப்பட்டது.

ஸ்ரீ வாணீ விலாச அச்சகம், ஸ்ரீரங்கம்.

சகம் 1889 கி. பி. 1967

விலை ரூ. 0-75

# PREFACE

The Siddha medical system is indigenous to Tamilnad and there is a considerable volume of very valuable material, yet in the hands of private individuals and institutions which would have to be gathered to provide ample material for study and research. Besides the large number of manuscripts available in the Sarasvati Mahal Library, many others have also been secured from outside and are being scrutinized and studied in our Literary (Medical) Research Unit. It has been keenly felt that considering the vast bulk of Siddha medical lore which has not received that amount of study which is needed, and the imperative need for bringing out the very valuable and unique methods available in this system, greater attention has to be focussed on the study and research of Siddha medical Literature.

Since almost all the Siddha medical works are written in classical Tamil, the object of the Literary Research Unit of the Sarasvati Mahal Library is to translate the Siddha medical works into Sanskrit, English and Hindi, so that the medical men all over India may be able to avail themselves of other systems of medicine and an integrated approach to the treatment of diseases by a synthesis of all these indigenous methods may be possible.

One such work is the *Therar Nirkuri* and *Neikkuri*, which is a small treatise in Tamil verses, on the examination of urine. This is a very unique method, found exclusively in Siddha System, because it deals with the diagnosis of all kinds of diseases by the symptoms noticed in the urine. As it was already resolved by the Sub-committee of the Central Council of Indigenous Medical Research, Sarasvati Mahal, Thanjavur, that some of the small works might be published in the T. M. S. S. M. Library Journal, this work is being now published through the Journal.

The verses in *Therar Nirkuri* and *Neikkuri* are in lucid and easy Tamil, and the prose rendering by our Siddha Research Officer, Thiru A. Shanmugavelan, M. A., B O. L., is simple and clear. We record here our profound appreciation for the Siddha Research Officer of the Literary

Research Unit, who has edited, with Tamil notes, the valuable work in a scholarly manner through our Library Journal. The prose rendering brings the precious and useful knowledge contained in the work within the easy reach of all the doctors.

It is our fervent hope that not only the practitioners of Ayurvedic, Siddha and other Systems of medicine but also the general public of the Tamilnad will derive the fullest benefit of this publication.

*O. A. Narayanaswami,*
Honorary Secretary,
T. M. S. S. M. Library.

Thanjavur
1—10—1967

# ஆசிரியரின் முன்னுரை

"சிறுநீர்க்குறி சோதனை' பற்றிய ஆராய்ச்சி வெளியீடு இது. இதை இயற்றியவர் தேரர் என்னும் சித்த மருத்துவப்புலவர். தமிழ்முனிவர் அகத்தியர் கூறியதை அடிப்படையாகக் கொண்டு தேரர் இந்நூலை இயற்றியதாகக் கூறுகின்றார். இதனை தேரர் கூறிய கீழ்வரும் பாடலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்

"இவ்வித முத்திரத்தினிலக்கண முற்று மந்தச்
செவ்விய மருத்து முன்னூல் செப்பிய வகைகளெல்லாம்
நவ்விபோல் விழியினளே : நாட்டின் மானிடருக்காக
அவ்விய மில்லாநெஞ்சத் தகத்திய னுரைத்ததாமே."

எனவே, பண்டைக்காலத்திலேயே சிறுநீரின் நிறம், குணம், குறி, முதலியவைகளை அறிந்து நோய் இன்னதென்று கண்டுபிடிக்குமுறை இருந்துவந்தது என்பது இதனால் தெரிகிறது. உலகில் வேறு எங்குமுள்ள வைத்திய முறையில் காணப்படாத முறைகளை இதில் காண்கின்றோம். இது மிகவும் பெருமிதப்படக்கூடிய செய்தியாகும். தமிழ்ச்செய்யுட்களில் இயற்றப்பட்டுள்ள இந்நூலை உரைநடையில் சுருக்கமாகவும், விளக்கமாகவும் எழுதினால் எல்லோருக்கும் பயன்படும் என்னும் நோக்கத்தோடு இது வெளியிடப்படுகின்றது. மேலும் இதனை ஆங்கிலம் முதலிய மொழிகளிலும் மொழிபெயர்த்தால், விஞ்ஞான முறையில் ஆராய்ச்சிக்கும் பயன்படும் என்பது கருத்து.

அகத்தியர் மாணாக்கர்களில் தேரையர் என்னும் ஒருவர் இருந்தார் என்பதை நூல்களின் வாயிலாகத் தெரிந்து கொள்கின்றோம். முற்காலத்தில் இருந்த அரசர் ஒருவருக்கு மருத்துவம் செய்தபோது, அவரின் கபாலத்தினுள் தேரை ஒன்று இருப்பதை அறிந்த அகத்தியமாமுனிவர் அறுவை வைத்தியம் செய்து தேரையை வெளிப்படுத்த முயன்றார். அறுவைக்குப்பின்னர், தேரையை எப்படி வெளிப்படுத்துவது என்று அவர் திகைத்துக் கொண்டிருந்தபோது, அருகில் நின்ற மாணவர் நீர்நிறைந்த தட்டினை ஏந்த அதில் தேரை பாய்ந்ததென்றும், மாணாக்கரின் அறிவுக் கூர்மையை அறிந்த குருபகவான் அகத்தியர் அம்மாணாக்கருக்குத் தேரையர் என்று பெயர் சூட்டியதாகவும் வரலாற்றுச்செய்தி கூறுகின்றது. எனினும் அக்காலத்தில் தேரையர் இயற்றிய நூல் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே, இந்தநூல் அகத்தியர் மாணாக்கர் தேரையர் எழுதியநூல் என்று கருதுவதற்கு இடமில்லை. இது பிற்காலத்தில் வாழ்ந்த தேரர் என்ற பெயருடைய ஒருவரால் எழுதப்பட்டுள்ளது. தேரையர், தேரர் என்ற இரண்டு சொற்களின் ஒற்றுமையை நோக்கி தடுமாற்றம் கொள்ளும்படியாக உள்ளது. பிற்காலத்தில் வாழ்ந்த இவர் வைத்தியத் துறையில் தேர்ந்தவராதலின் தேரர் என்று அழைக்கப்பட்டார். இந்நூல் செய்த தேரர், கூரம் எனும் ஊரிலிருந்த தருமசௌமியர் என்பவரை ஆசிரியராகக் கொண்டு மருத்துவம் கற்றவர். தருமசௌமியர் என்னும் பெயர் பௌத்த மதத்தைச் சார்ந்தவராயிருக்கலாமோ என்று எண்ண இடந் தருகின்றது. ஆனால் தேரர் சிவப்பற்றுடையவர் என்பது அவர் பாடிய கடவுள் வாழ்த்து முதலிய குறிப்புகளிலிருந்து தெரிந்துகொள்ளலாம், முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் தொண்டை

நாட்டில் பால் ஆற்றின் வடகரையிலுள்ள திருமலைச்சேரி என்னும் ஊரில் பிறந்தவர். நம்பிபூபதி எனும் வேளாளரின் அருமைத்திருமகன். இளமையிலேயே தமிழிலுள்ள இலக்கண இலக்கிய நூல்களையும், சித்தமருத்துவ நூல்களையும் நன்கு கற்றுத் தேர்ந்தவர். தொண்டைநாட்டு மன்னரின் உதவியும் கிடைக்கப்பெற்றவர். இவர் இயற்றிய நூல்கள் மொத்தம் பதினான்கு. அதில் தேரர் நீர்க்குறி, நெய்க்குறி என்ற இந்த நூலும் ஒன்றாகும்.

1. தேரர் சிகாமணி வெண்பா. 2. தேரர் நிகண்டு. 3. தேரர் சேகரப்பா. 4. தேரர் காப்பியம். 5. தேரர் தரு. 6. தேரர் நாடகம் (மருத்துப்பாரதம்). 7. தேரர் அந்தாதி 8. தேரர் வண்ணம். 9. தேரர் நாள்மாலை. 10. தேரர் யமகவெண்பா. 11. தேரர் எதுகைப்பா 12. தேரர் கரிசல், 13. தேரர் தைலவருக்கம். 14. தேரர் நீர்க்குறி, நெய்க்குறி.

தேரர் உண்மையிலேயே வைத்தியத்துறையில் நன்கு தேர்ந்தவர் என்பது அவர் இயற்றிய நூல்களிலிருந்து தெரிந்துகொள்ளுகிறோம். பாடல்கள் பாடுவதிலும் வல்லவர்.

அகத்தியர் கூறிய சிறுநீர்க்குறி முதலியவைகளையும் அறிந்து சித்தசாரனவம், சித்திய வித்தியாதரம், நித்திய நாதீயம், மாதவ கற்பம் போன்ற வேறு பல நூல்களிலுள்ள குறிப்புகளையும் ஆராய்ந்து இந்நூலை இயற்றியுள்ளார் என்பது தெரிகின்றது.

சிறுநீரில் எண்ணெய்த்துளிவிட்டுப்பார்க்குங்கால் கண்ணாடி, எருது, வெற்றிலை, குதிரை ஆகிய குறிகள் காணப்பட்டால் நோய் தீருமென்று ஒரு செய்யுளில் கூறப்பட்டுள்ளது. அதே குறிகள் கண்டால் நோய் தீராது என்றும் மற்றொரு செய்யுளில் கூறப்பட்டுள்ளது. இது போன்ற இடங்கள் ஆராய்வதற்குரியன. ஒவ்வொரு நோயிலுங் காணப்படும் சிறுநீர் விகற்பத்தினை அகர வரிசையில் முடிவில் இணைத்துள்ளோம். இது ஆராய்ச்சியாளருக்கு மிகவும் உதவியாக இருக்கும். சிறுநீர்க்குறிபற்றிய சோதனை விஞ்ஞான முறையில் மிகவும் முன்னேற்றம் அடைந்திருக்கும் இக்காலத்தில் இதுபோன்ற பழமையான நூலில் அடங்கியுள்ள கருத்துக்களையும் ஆராய்ந்து அறிந்து பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு இதனை எழுதலானேன்.

இதனை அன்புடன் வெளிப்படுத்துதவிய தஞ்சை சரசுவதி மஹால் நிர்வாகக்காரியதரிசி உயர்திரு ஓ. ஏ. நாராயணசுவாமி பி. ஏ., பி. எல் அவர்களுக்கும், ஷை நூல்நிலையக்காப்பாளர் உயர்திரு வி. கோபால ஐயங்கார், எம். ஏ., அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

இத்தகைய ஆராய்ச்சியில் என்னை ஊக்கப்படுத்திவரும் பாளையங்கோட்டை இந்திய வைத்தியக் கல்லூரி முதல்வர் டாக்டர் க. சு. உத்தமராயன், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கும், சென்னை டாக்டர் வி. நாராயணசுவாமி எச் பி ஐ எம் அவர்கட்கும் தஞ்சை இந்திய வைத்தியத்துறை ஆயுர்வேத ஆராய்ச்சிப் பேராசிரியர் உயர்திரு வி. எஸ். வேங்கடசுப்ரமணிய சாஸ்திரிகள் அவர்களுக்கும் என் அன்பு உரியதாகுக.

சரசுவதி மஹால், தஞ்சை,
24—9—1967.

**ஆ. சண்முகவேலன்,**
சித்த வைத்திய ஆராய்ச்சிப் பேராசிரியர்
இந்திய வைத்திய ஆராய்ச்சித் துறை

டாக்டர் க. சு. உத்தமராயன், எச். பி., ஐ. எம்., பாளையங்கோட்டை,
முதல்வர்,
அரசாங்க இந்திய வைத்தியக் கல்லூரி,

# மதிப்புரை

நீர்க்குறி நெய்க்குறி என்னும் இந்நூல் தேரரால் இயற்றப்பட்ட நூல்; வைத்தியத் துறையில் தேர்ந்தவரென மதிக்கப்பட்டதால், தேரர் என்பது சிறப்புப் பெயராக இருக்கலாம். சித்த மருத்துவத்துறையில் இது ஒரு நல்ல நூல். இவர் இயற்றிய நூற்களில் ஒன்ருகிய கரிசலில், "உத்தமமஞ்சிவாடுசுமி நீவென வேமனர் வடுகில் உரைத்தல்போல" எனக்கூறியிருப்பதிலிருந்து இவர் வேமனருக்குப் பிற்பட்டவராகவோ, அல்லது சமகாலத்தவராகவோ இருந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணுகின்றனர். வேமனர் காலம் சுமார் 300 ஆண்டுக்கு மேற்பட்டது. எனவே, தேரருடைய காலம் ஏறக்குறைய 350 ஆண்டுகட்கு முற்பட்டதெனக் கருதலாம்.

இவர் எழுதிய நூற்களின் தொகுப்பைக் குறிக்கும் பாடல் இது !

"சிகாமணி வெண்பா நிகண்டு சேகரப்பா
தேரையர் காப்பியந்தரு நாடக மந்தாதி
மிகா வண்ணம் நாண் மாலை யமகவெண்பா
விளங்கெதுகைப் பாயிவை யெல்லோரு மெச்சு
மகா மகிமைக் கரிசலெனு மூறை யிராறும்"

இதனுல் தேரர் இயற்றிய நூற்கள் பன்னிரண்டு என்று தெரிந்துகொள்ளுகிருேம் மேலும் இதில் கூறப்படாத நூற்களில் "தேரர் தைல வருக்கமும்", "தேரர் நீர்க்குறி நெய்க்குறியு" மாகும். இவை இரண்டும் தேரரால் பிற்காலத்தில் செய்யப்பட்டிருக்கலாமென்று கருதப்படுகின்றது.

நோய்களைக் கணிப்பதற்குச் சித்த மருத்துவமுறையில் கூறப்பட்ட எண்வகைத் தேர்தலாகிய நாடி, பரிசம், நா, நிறம், மொழி, விழி, மலம், மூத்திரம் என்பவற்றுள் நாடி முதன்மையானது என்பது எல்லோராலும் கொள்ளப்பட்ட ஒரு முடிவு. அதற்கடுத்தபடியாகச் சிறுநீர்ச் சோதனையாகும்.

இச்சோதனையை "நீர்க்குறி நெய்க்குறி" என்ற தலைப்பிட்டு இச்சிறு நூலைச் சூத்திர வடிவமாக யாத்துள்ளார். இந்நூலில் சிறுநீரின் நிறம், எடை, மணம், நுரை குறைதல் என்பவற்றை நிதானித்தும், நெய்த்துளி (எண்ணெய்த்துளி)யைச் சிறுநீரில் விட்டு அதில் காணும் உருவங்களைக் கொண்டும், நோய் இன்ன குற்றத்தினுல் ஏற்பட்டதென்பதையும், தீரும், தீராது, என்பதுபற்றியும் விளக்கமாகக் கூறப்பெற்றிருப்பதால், நோய் நிதானத்திற்கு இந்நூல் பெரிதும் பயன்படுமென்பதில் ஐயமில்லை,

இந்நூல் சித்த மருத்துவம் கற்கும் மாணவர்கட்கும், மருத்துவர்கட்கும், பிணிகளைத் தேர்வதற்கு (நாடிக்கு அடுத்தபடியாக) மிகவும் பயன்படும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

இந்நூல் இப்போது அச்சில் இல்லை: ஆதலால், தஞ்சை சரஸ்வதிமகால் நூல் நிலைய சித்த மருத்துவ ஆராய்ச்சித்துறைத் தலைவர் டாக்டர் ஆ. சண்முகவேலன், எம். ஏ; அவர்கள் யாவருக்கும் விரைவில் விளங்குமாறு ஒரு தொகுப்புரை எழுதியுள்ளார்கள். அவர்கள் முயற்சி வெற்றி பெறுவதாக! தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தார் அவர்களது திங்கள் வெளியீட்டில் இதனை வெளியிட்டிருக்கின்றார்கள். அவர்கட்கு என் நன்றி உரியதாகும்.

மேலும், வெளிவராத சித்த மருத்துவ நூற்களுக்கு உரை எழுதி வெளியிடுமாறு டாக்டர் ஆ. சண்முகவேலன், எம். ஏ., அவர்களை ஊக்குவதுடன், அவர் மேற்கொண்டுள்ள ஆராய்ச்சி நல்ல முறையில் யாவர்க்கும் பயன்பட எல்லாம்வல்ல இறைவனை வணங்குகிறேன்.

பாளையங்கோட்டை,
15—6—67.

க. சு. உத்தமராயன்,
முதல்வர்.
அரசாங்க இந்திய வைத்தியக் கல்லூரி.

குறிப்பு :- எண்ணெய்த்துளி, சல்லடைக்கண்போல் காணப்படுவதை தீரா நோய்க் குறி என்று கௌதமர் கூறியபோதிலும், தேரர் அக்கொள்கையை மறுத்து—அது கபத்தின் குறியேயாதலால் தீரும் நோய்க்குறியே என்றுங் கூறியுள்ளார்.

தீரா நோய்க்குறி :— சிறு நீரில் விட்ட எண்ணெய்த்துளி அதில் அமிழ்ந்து போனால், அந்நோய் தீராது. கண்ணாடிக்குவளையிலன்றி மட்பாண்டத்திலும் நீரைப்பிடித்து எண்ணெய்த்துளி விட்டுப் பார்க்கலாம்.

தீரு நோய்க்குறி :— நோயாளியின் சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளி கீழ்க் கண்டவை போல் மனிதன், மீன், கோவில், கோவில் மதில் சுற்று, பெரியயானை, மலை, குடை, மரம், வெண்சாமரை, தாமரைப்பூ, யானையின் கொம்பு, குல்லாய், சங்கு கண்ணாடி, மகர தோரணங்கள், பூமி, வீணை, சதுரமாயிருக்கின்ற வீடு, பாகல் இலை, வண்டு, தாமரை மொக்கு, சிம்மாசனம் போல் காணப்படுமானால் நோய் தீரும். மேலும் சிறுநீரில் விடப்பட்ட எண்ணெய்த்துளி மத்தளம், கொடி, பானை, பன்றி, காட்டு விலங்கு, குயவன் சக்கரம்போல் தோன்றினால் நோய் தாமத சாத்தியமாகும்.

தீரா நோயின் குறிகள் :— நோயாளியின் சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளி, கீழ்க்கண்டவைப் போல் தோன்றும்.

ஒருகால், மூன்றுகால்கள், நான்கு கால்களையுடைய மனிதர், உடல் பருத்த மனிதர், தலையில்லா மனிதர், முன்கையில் கத்தி. சூலம், உலக்கை, வில், அரிவாள் பாம்பு, பூனை, எலி, அம்பு, நண்டு, சுரைக்காய், கோழி, புலி, குரங்கு, சிங்கம், குதிரை, வெற்றிலைக்கொடி, எருது, கரடி, பறவை, ஆமை, தேள், எண்ணெய்த் துளி பரவாமை, பொங்கிப்பரவல், இவை காணப்பட்டால், நோய் தீராது. இக் குறிகள் யாவும் அகத்திய முனிவரால் கூறப்பட்டுள்ளவை.

### வேறு

சந்நிவாத நோயும், தீரும் நோயும் :— நோயாளியின் சிறுநீரில் துரும்பாலிட்ட எண்ணெய்த்துளி பாதி மிதந்து, பாதி கீழிறங்குமாயின், அவன் நோய் சந்நிவாத நோயாய் மாறும். அவ்வெண்ணெய்த்துளி சதுரவடிவமாகவும், தாமரை கண்ணாடி, குடை, சங்கு, தேர்ச்சக்கரம், சாய்ந்தமரம், குண்டலி போலவும் தோன்றினால் அந்நோய் தீருமெனக் கொள்ளலாம்.

தீருங்குறியும், தீராக்குறியும்:- நோயாளியின் சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளி சோற்றுக்கம்பம், குள்ளன், வெற்றிலை, குதிரை, எருது போல் தோன்றின் அவனிட முள்ள நோய்கள் தீர்ந்து இனிதே வாழ்வான். பறவை, ஆமை, நாய், சிங்கம்,

பன்றி, பாம்பு, குரங்கு, தேள், பூனை மனிதன்போல் தோன்றினால், நோயாளி இறந்தான் என்றே கொள்ளல் நன்று.

மேலும் சிறுநீரில் விட்ட எண்ணெய் தலையில்லா முண்டம் போல் தோன்றின் இறப்பான் என்றும், ஒரு நாம வட்டம் போல் தோன்றின் இறவான் என்றும் அறிதல் வேண்டும்.

வேறு

சுரநீர் விகற்பம் :— சுரநோயால் பீடிக்கப்பட்டவனின் சிறுநீர் தெளிவாயிருந்தால், வாதநோயால் பாதிக்கப்படுவான். சுருக்காகவும், பச்சை நிறமுடையதாகவுமிருந்தால், அச்சுரநோய் பித்தவெட்டை காரணமாய் வந்ததாகும். சிவப்பு நிறமுடையதாயிருந்தால், தோஷம் அல்லது சந்நி உண்டாகும். சுரமுடையவன் சிறுநீரில் சுண்ணம் போல் படிந்திருக்குமாயின், அந்நோய் தீராது.

சிறுநீர்ப் பெருக்கம் :— உண்ணும் நீர் பொங்கி, உடற்கருவிகளில் தங்காமல் நீர்ப்பையிலேயே தங்கி, பலப்பல நிறமாக இடைவிடாது சிறுநீர் இழியுமானால், உடலுக்குக் கெடுதியை விளைவிக்கும்.

மேகநீர் :— சிறுநீர் விடப்பட்ட இடத்தில் சுண்ணம் படிந்திருந்தால், எலும்புருக்கி நோய் உண்டாயிருக்கவேண்டும். நீர்கலந்த மோர் அல்லது நெய் போலும் படிந்திருந்தால் மேகவெட்டை நோய் காரணமாகும். இழிவதற்கு முன்னும், பின்னும், நீர்த்தொளை அடைத்திடின் பிரமியம் காரணமாகும். இழிந்த சிறுநீரில் எறும்புகளும், ஈக்களும் மொய்த்தால், அந்நீரையுடையவனின் நோய் தீராது.

சிறுநீர் இலக்கணம் :— சிறுநீர் தெளிந்திருந்தால் வாத நோய் காரணமாகும் மஞ்சள் நிறத்திலிருந்தால் பித்த நோய் காரணமாகும். வெண்மையாய் நுரைத்திருந்தால் கபநோய் காரணமாகும். கலந்திருந்தால், தொந்த நோய் காரணமாகும்.

நீர்க்குறிச் சிறப்பு :— வைத்தியர்களுக்கு நாடிக்குறிகளைக் கொண்டு நோயைக் கணிப்பது மயக்கத்தைக் கொடுத்தால், அவற்றைவிட நீர்க்குறிகள் தான் இன்ன நோயென்றறிய சிறப்பானவை.

இரத்தக்கொதிப்பு நீர் :— சிறுநீர் சிவந்திருந்தால், அது இரத்தக் கொதிப்பால் உண்டான நீரென அறிதல் வேண்டும். உஷ்ண மிகுதியினால் கொதிப்பு ஏற்பட்டு, நீர்சுருங்குவதனால் இக்குறி தென்படும்.

பித்த கோபநீர் :— முற்கூறிய சிறுநீர், மிகச் சிவந்திருந்தால், அது பித்த மிகுதி காரணத்தால் உண்டாகும், மூலச்சூட்டால் எரிந்து சிவப்பாய்த் தோன்றிற்றென்றும் சொல்லலாம்.

சேத்தும கோபநீர் :— சிறுநீர் அளவில் குறைந்து வெண்மையாயிருந்தால் அது சேத்துமத்தால் உண்டாகும். குளிர்ச்சியினுல் வெண்மை நிறமாகலாம். இரத்தக் குற்றத்தால் அளவிலும் குறையலாம்.

வாதகோப நீர் :— சிறுநீர் வெண்மையாயிருந்து தெளிந்துமிருந்தால், அது வாதமிகுதியினுல் உண்டாயிருக்கும். குளிர்ச்சியினுல் வெண்மை நிறமும் வறட்சியினுல் தெளிவும் ஏற்பட்டதெனக் கொள்ளல் வேண்டும்.

இரத்தவாத பித்தக் கலப்புநீர் :—சிறுநீர் கனத்தும், இறுகலாயுமிருக்குமானுல் அஃது இரத்தக்கொதிப்பால் ஏற்பட்ட நீராகும். தசை மென்மையாகக் கரைந்து சிறுநீரில் கலந்து வெளிப்பட்டால் பித்தவாதக் கலப்பால் ஏற்பட்டதாகும்.

வயது, காலம், நட்சத்திரங்களினுல் சிறுநீரின் மாற்றம் :— இதுவரை சொல்லப்பட்ட சிறுநீர்க்குறிகள், வயதினுலும், பருவத்தினுலும், நட்சத்திரங்களின் மாற்றத்தினுலும், பித்தம் மிஞ்சினதால் ஏற்பட்ட குறிகளாகும்.

உஷ்ணநீர் :— சுரத்தால் பீடிக்கப்பட்டவரின் சிறுநீர் வெள்ளை நிறத்துடனும் உவர் பொருந்தி தெளிந்திருந்தாலும், அது உஷ்ணத்தினுலாயது.

முறைக்காய்ச்சல் நீர் :— முறைக்காய்ச்சலுள்ளவர்களின் சிறுநீர் கனத்திருந்தால், அக்காய்ச்சல் விரைவில் குணப்படும்.

சிறுநீர் சிவந்து மிகவும் தெளிவுற்றிருந்தால், அந்நீர் மூன்று நாளைக்கொரு தரம் வரும் காய்ச்சலாகும். அந்நீர் இறுகிச்சிவந்து, பின்பு வெள்ளையானுல், அந்நீரையுடைய நோயாளிக்கு கபாலத்தில் பித்தம் போயடையும்.

தலைக்கனப்பு, மயக்கம் :— கண்ணுடிக்குவளையில் விட்ட சிறுநீர்ப் பரப்பில் வளையம் போல் பரந்து நின்ருல் அந்நீருடையவர் தலை கனத்து மயக்கமடைந்திருப்பார் என் மருத்துவநூல் ஆராய்ந்தோர் சொல்லுவார்கள்.

தலையின் இடப்பக்கநோய் :— கண்ணுடிக்குவளையில் பிடித்து வைத்த சிறுநீர் அதன் அடியிற் சிவப்பாயிருந்தாலும், மஞ்சளாயிருந்தாலும், தெளிவுற்றிருந்தாலும், தலையின் இடதுபக்கம் நோயால் பீடிக்கப்பட்டதென்று உணர்க.

தலையின் வலப்பக்க நோய் :— சுரமுடையோர்க்கு சிறுநீர் வெண்மையாயும், கருப்புமாகி தெளிந்திருந்தால், நோயாளிக்குத் தலையின் வலப்பக்கத்தில், துன்பத்தைக்கொடுக்கும் நோயுண்டென்று விளக்கமாய்ச் சொல்லலாம்.

காய்ச்சலுடன் கூடிய மார்பு நோயைக் காட்டும் நீரின் நிறம் :— பாத்திரத்தில் பிடித்துவைத்த நீரின் அடிப்பாதி சிவந்து, கலங்கியும், மேற்பாதி தெளிவுற்று

மிருந்தால் அந்நீரையுடையவனுக்கு நெஞ்சுவலி, காய்ச்சல் இருக்கும் என்று மருத்துவ நூல் வல்லோர் கூறுவர்.

நீர்க்குண்டிக்காயில் கல்லிருப்பின் அதனையுணர்த்தும் நீர் :— சிறுநீர் தயிர்நீர் அல்லது பால்போல் இழிந்து, அதன் அடியில் வண்டல் இருந்தாலும், அந்நீரையுடையவருக்கு நீர்க்குண்டிக்காயில் கல்லிருப்பதால் ஏற்பட்டதென்று சொல்லலாம்.

## இரத்த தொந்தநோய்

ஈரல் சுரம் :— சிறுநீர் சிவந்து சிறிது தெளிவுற்றிருந்தால், அது இரத்த தொந்திப்பாலுண்டானது. அது கலங்கிச்சிறிது கருத்திருக்குமாயின், வெப்பம் ஈரலைத் தாக்கியதாலுண்டான காய்ச்சல் என்று அறியவேண்டும்.

இருதயநோய் :— சிறுநீர் தலைமுடியின் நிறத்தை யொத்தால், தமரகப் பிணியுண்டாகுமென்று சொல்லுவர்.

நெய்க்குறி (வேறு) :— சிறுநீரின் குணங்களைக்கொண்டு நோய்களையறிய மற்றொரு சோதனையாகிய நெய்க்குறி கூறப்படும்.

சிறுநீரைச்சேகரிக்கும் நேரம் :— விடியற்காலத்தில் காலை 4 மணிக்கு விடும் சிறுநீரை பீங்கானில் பிடித்து வைத்திருந்து, அந்நீரில் எண்ணெய் விட்டுப் பார்க்க வேண்டும்.

இரத்த மிகுந்த வெப்பு :— சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளித் வீசிப்பரந்து வட்டமாய் நின்ருல், இரத்தம் பொங்குதலால் ஏற்பட்டதென்று அறியவேண்டும்.

இரத்தக்குறைவு :— எண்ணெய்த்துளி, விரைவில் கதிர்போல் நீண்டால், இரத்தம் கெட்டுக் குறைந்ததாலுண்டானதென்று அறிய வேண்டும்.

பித்த மிகுதி :— அந்த எண்ணெய்த்துளி கதிர்முனையைப்போல் நீண்டால், பித்தத்தின் மிகுதியால் உண்டானதென்றறிய வேண்டும். இந்நோயில் பேதி உண்டானுல் நோய் அற்றுப்போகுமென்று நூல் வல்லோர் கூறுவர்.

சீதமிகுதி :— எண்ணெய்த்துளி நெகிழ்ச்சி அடையாமல் அப்படியே நின்ருல் சீதமிகுதியால் உண்டானதென்று அறியவேண்டும்.

நோய் தீராக்குறி :— சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளி நீரினுள் அமிழ்ந்தால் அந்நீரையுடையவனின் நோய் தீருவது அரிது.

குளிர்மை :— நாவரட்சி இல்லாமலும், உடம்பில் குளிரிருந்தாலும், உடலில் நடுக்கமிருந்தாலும், வாயில் நீர்ஊறினுலும், உடல், கை, கால் வெம்பினுலும், இரவிலே அதிக நீர் கழிந்தாலும், உடலின் மிக்க சீதளத்தைக் குறிக்குமென்பர்,

முலைப்பால் குறி:— நோயாளியின் சிறுநீரில், ஆண்பிள்ளையைப்பெற்ற தாயின் முலைப்பாலை விடு. இது அச்சிறுநீரில் கலந்தால், நோய் தீரும். கலவா விட்டால் நோயாளி இறப்பான் என்றும் கொள்க.

மரணமறிய:— நோயாளியின் காலின் மேல்புறமும், கீழ்ப்புறமும், பன்றியின் கொழுப்பைத்தடவவும். பின்பு அதை வழித்து நாய்க்கு இடு. நாய் அதைத் தின்று சீரணித்துக்கொண்டால், நோயாளி பிழைப்பான் என்க. நாய் சீரணிக்காமல் வாந்தி செய்தால், நோயாளியின் நோய் தீர்தலரிது.

குருதிக்குறி:— நோயாளியின் இரத்தத்தில் இருதுளியைக் குளிர்ந்தநீரில் விடு. அஃது உள்ளே அமுந்தின் நன்றென்றும், நெகிழுமாயின் மரணம் நேரிடு மென்றும் அறிக.

சிறு நீர் சோதனை:— நோயாளியின் சிறுநீர் மஞ்சள் நிறமாயிருந்தால் அஃது உத்தமம். தேன் போன்ற நிறமாயிருந்தால் மத்திமம். பால்போல் வெண்ணிற மாயிருந்தால், அதமாதமமாகும்.

---

# நோயும் சிறுநீர் விகற்பமும்

அகர வரிசை.

| நோய் | | சிறுநீர் விகற்பம் |
|---|---|---|
| அசீரணம் | ... | சிறுநீர் நனைந்தூறிய வைக்கோலிலிருந்து ஒழுகும் நிறத்தைப்போன்று இருக்கும். |
| அசாத்தியம் | ... | சிறுநீரில் சுண்ணம் படிந்திருக்கும். |
| ,, | ... | சிறுநீரில் எண்ணெய்த் துளியை விட்டுப் பார்க்கில், எண்ணெய்த் துளி சிறுநீரில் அழுந்தும். |
| இரத்தக்கொதிப்பு | ... | சிறுநீர் மிக்க செந்நிறமாகிய பன்னீர்ப் பூப் போன்று இருக்கும். |
| ,, | ... | சிறுநீர் கனத்து இறுகலாக இருக்கும். |
| ,, | ... | சிறுநீரில் எண்ணெய்த் துளியை விட்டுப் பார்க்கில், எண்ணெய்த்துளி வீசிப்பரந்து வட்டமாக இருக்கும். |
| இரத்தம் பெர்ங்குதல் | ... | சிறுநீர் செம்மையும், கருமையும் பொருந்தி இருக்கும். |
| ,, | ... | சிறுநீர் கறுப்பும், சிறிதுசெம்மையும், கலந்து இருக்கும்; அன்றித்தனித்த சிவப்பு நிறமாகவும் இருக்கலாம். |
| இரத்தக்கெடுதி அல்லது குறைவு | ... | சிறுநீர் குங்குமப்பூ நிறத்துடன் கருநிறமும், சிறிது செம்மையும் கலந்து இருக்கும். |
| ,, | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி திரைபோல் நீண்டிருக்கும். |
| இரத்த தொந்திப்பு | ... | சிறுநீர் சிவந்து தெளிவுற்றிருக்கும். |
| இதயநோய் (தமரகப்பிணி) | ... | சிறுநீர் தலைமுடியின் நிறமாயிருக்கும். |
| இடத்தலைநோய் | ... | சிறுநீர் மஞ்சளாகவும், சிவப்பாகவும் தெளிவாகவும் இருக்கும். |
| ஈரல் வெப்பம் | ... | சிறுநீர்க் கலங்கிக் கருத்திருக்கும். |
| உஷ்ணம் | ... | சிறுநீர் காட்டு நாரத்தம் பழத்தோலின் நிறமாயிருக்கும். |
| ,, | ... | சிறுநீர் புளியின் மணமாயிருக்கும். |
| ,, | ... | சிறுநீர் வெண்மையாகவும், உவர் பொருந்தி தெளிந்து மிகுந்திருக்கும். |
| உஷ்ணம் (அதிகம்) | ... | சிறுநீர் கொதிக்கின்ற தீயின் நிறத்தைப் போன்று இருக்கும், |

| | |
|---|---|
| உஷ்ணம் (உச்சநிலை) | ... சிறுநீரில் மஞ்சள் நிறமும், குங்குமப்பூ நிறமும், வரிவரியாகக் காணும். |
| உஷ்ணம் (கொடிய) | ... சிறுநீர் மோரைப்போலும், பாலைப்போலும் நிறத்தையுடையதாயிருக்கும். |
| உதிர விருத்தி அல்லது உதிரவிருத்தியாலாகிய பிணி | ... சிறுநீர் இனித்த மணமாயிருக்கும் |
| உடற்பசைக் கேடு | ... சிறுநீர் புலால் மணம் வீசும். |
| அவலம்பகம், தருப்பகம், கிலேதகம், சந்திகம், போதகம். | ... சிறுநீரில் வாயு சம்பந்தப்பட்டு நுரையுடன் ... இழிதலாகும். |
| உடற்கேடு | ... சிறுநீர் அடிக்கடி இழியும் |
| எலும்புருக்கி | ... சிறுநீர் பால்போன்றிருக்கும். |
| ,, | ... சிறுநீரில் சுண்ணம் படிந்திருக்கும். |
| கபம் | ... சிறுநீர் இலைப்பச்சை நிறமாயிருக்கும். |
| ,, | ... சிறுநீர் வெளுத்தும், சளியைப் போன்றும் இருக்கும். |
| ,, | ... சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி முத்துப்போன்றிருக்கும். |
| ,, | ... சிறுநீர் வெண்மையாக உறைந்திருக்கும். |
| ,, | ... சிறுநீர் நுரைபொருந்தியிருக்கும். |
| ,, | ... சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி சல்லடைக்கண் போற் காணும். |
| ,, | |
| ,, | ... சிறுநீர் வெண்மையாகவும், அளவில் குறைந்தும் இருக்கும். |
| ,, | ... சிறுநீர் வெண்ணிறத்துடன் நுரையும், குமிழும், குடிநீர் போன்றும், நெய்யைப்போல பல நிறமாகவும் காணும். |
| கபவாதக் கலப்பு | ... சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி கந்துருபோல் பரவிக்காணும். |
| கபால பித்தம் | ... சிறுநீர் இறுகிச் சிவந்து பின் வெண்மையாகும். |
| கருப்பைபுண் | ... சிறுநீர் சீயும், துர்நாற்றமுமாயிருக்கும். |
| கல்லடைப்பு நோய் | ... சிறுநீர் சீயும், துர்நாற்றமுமாயிருக்கும். |
| காமாலை | ... சிறுநீர் குங்குமப்பூ நிறத்துள் கருமை கலந்து இருக்கும். |

| | | |
|---|---|---|
| ,, | ... | சிறுநீர் மஞ்சள், கருமை, செம்மை நிறங்களுடன் நுரை பொருந்தி இருக்கும். |
| ,, | ... | சிறுநீர் மிக்க செம்மஞ்சளாக இருக்கும். |
| குண்டிக்காய் வன்மைக்குறைவு | - | சிறுநீர் கெட்டுப்போன தசையைக் கழுவிய நிறத்தையுடையதாயிருக்கும். |
| குருதிக் கொதிப்பு | ... | சிறுநீர் கெட்டுப்போன தசையைக் கழுவிய நிறத்தையுடையதாயிருக்கும். |
| கொடியநோய் | ... | சிறுநீர் கனப்பாகவும், நெய்ப்பசையாகவும், இருக்கும். |
| கோழை கொதிப்பு | ... | சிறுநீர் கெட்டுப்போன தசையைக் கழுவிய நிறத்தையுடையதாயிருக்கும். |
| கோழை நோய் | ... | சிறுநீர் இந்திரியத்தைப்போன்றிருக்கும். |
| சன்னி | ... | சிறுநீர் சிவந்திருக்கும். |
| சன்னிவாதம் | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப்பார்க்கில் எண்ணெய்த்துளி சிறுநீரில் அமுழ்ந்தும். |
| சன்னிவாதம் | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப்பார்க்கில் எண்ணெய்த்துளி பாதி கீழ் அமுழ்ந்தியும், பாதி மேல் மிதந்தும் தோன்றும். |
| சாத்தியம் (தாமத) | ... | சிறு நீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி மத்தளம், கொடி, பானை, பன்றி, காட்டுவிலங்கு இவைகளைப் போற் காணும். |
| சீரண பக்குவம் | ... | சிறுநீர் துரிஞ்சிப்பழத்தின் நிறத்தையுடையதாயிருக்கும். |
| சீதளம் | ... | சிறுநீர் கருப்பும், சிறிது பச்சையுமான நிறத்தையுடையதாக இருக்கும். |
| சீதள (மிகுதி) | ... | சிறுநீர் நீலச்சாயை பொருந்தியிருக்கும். |
| ,, | ... | சிறுநீர் கனமின்றித் தெளிந்திருக்கும். |
| ,, | ... | சிறுநீர் தெளிந்தும், இரவில் அதிகபாசவும் இழிதலாகும். |
| சுத்த சீதளம் | ... | சிறுநீர் வெண்ணிறத்துடன் தெளிந்திருக்கும். |
| சுரம் | ... | சிறுநீர் மஞ்சள் நிறமாயிருக்கும். |
| தமரகநோய் | ... | சிறுநீர் தலைமுடியின் நிறமாயிருககும். |
| தலைக்கனப்பு, மயக்கம் | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப்பார்க்கில் எண்ணெய்த்துளி வளையம்போற் காணும். |
| தொந்தநோய் | ... | சிறுநீர் பல நிறமாக இருக்கும். |

| நோய் | | சிறுநீர் விகற்பம் |
|---|---|---|
| நீர்க் குண்டிக்காயில் கல் | ... | சிறுநீர் தயிர்த்தெளிவைப்போலும், பாலைப் போலும் அடியில் வண்டல் காணப்படும். |
| பாண்டுநோய் | ... | சிறுநீர் இயற்கை அளவுக்குக் குறைந்திழிதல். |
| பித்தம் | .... | சிறுநீர் கனிந்த பொம்மன் மாசுப்பழம், சௌவீரத்தின் ஒளி, எள்நிறம் இவற்றைப் போற்காணும். |
| ,, | ... | சிறுநீர் கருநிறமானின் மணமுடையதாயிருக்கும். |
| ,, | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் எண்ணெய்த்துளி மோதிரம் போன்று காணும். |
| ,, | ... | மேற்படி கதிர்முனைபோல் காணும். |
| ,, | ... | சிறுநீர் பசுமையாகச் சிவந்து எரிச்சலுடன் கடுத்திறங்கும். |
| ,, | ... | சிறுநீர் சிவப்பு மஞ்சளாக இருக்கும். |
| ,, | ... | சிறுநீர் மஞ்சளித்திருக்கும். |
| ,, | ... | சிறுநீர் மிகவும் சிவந்திருக்கும். |
| பித்த கபம் | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் சிறுநீரில் பாதி மேலும் பாதிகீழுமாக இருக்கும். |
| பித்த காமாலை | ... | சிறுநீர் மஞ்சள் நிறமாகவும், உதிரத்தை யொத்த நிறமாகவும் இருக்கும். |
| பித்தவாதக் கலப்பு | ... | சிறுநீரில் தசைகரைந்து வெளிப்படும். |
| பிரமிய நோய் | ... | சிறுநீர் போகு முன்னும், பின்னும் நீர்த்துவாரம் அடைக்கும். |
| மார்புவலி | .... | சிறுநீரைப் பாத்திரத்தில் பிடித்து வைக்க அடிப்பாதி சிவந்து கலங்கியும் மேற்பாதி தெளிந்து மிருக்கும் |
| முறைக்காய்ச்சல் | ... | சிறுநீர் சிவந்து தெளிந்திருக்கும். |
| மூலச்சூடு | ... | சிறுநீர் மிகவும் சிவந்திருக்கும். |
| மேகநோய் | ... | சிறுநீரில் உதிரம் வெளிப்படும். |
| மேகவெட்டை | ... | சிறுநீரில் நீர் கலந்த மோர்போலும் நெய்யைப் போலும் படிந்திருக்கும். |
| வலத்தலை நோய் | ... | சிறுநீரைப் பாத்திரத்தில் பிடித்துவைக்க வெண்மையாகவும், கருப்பாகவும் தெளிவுற்று மிருக்கும், |

| நோய் | | சிறுநீர்விகற்பம் |
|---|---|---|
| வாதம் | .... | சிறுநீர் வெண்ணிறத்தையும், உதிர நிறத்தையும் உடையதாகயிருக்கும். |
| ,, | ... | சிறுநீரில் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் அது பாம்புபோல் நீளமாய்க்காணும். |
| ,, | ... | சிறுநீர் கடுத்து நொந்து சிறுத்துப் பொருமி இழியும். |
| ,, | ... | சிறுநீர் சுரத்துடன் தெளிந்தநீர் இழிதல். |
| வாதபித்த கபம் | ... | சிறுநீர் நீலநிறத்துடன் தடித்துக் காணும் |
| ,, | ... | சிறுநீர் மிக்கத் தடித்திழியும். |
| ,, | ... | சிறுநீர் கொடிய மணம் வீசும். |
| ,, | ... | சிறுநீர் நுரைகுறைந்திழியும். |
| வாதபித்த கலப்பு | ... | சிறுநீர் எண்ணெய்த்துளியை விட்டுப் பார்க்கில் புல்முனையைப்போற் காணும். |
| விஷத்தாலாகிய் சீதளம் | ... | சிறுநீர் ஆகாயத்தை யொத்த நிறமாக இருக்கும் |

## தீரும்நோய்

1. சிறுநீரில் விட்ட எண்ணெய்த்துளி வட்டமாகவும் பரவலாகவும் காணில்
2. திருமால் இடத்தோளிலுள்ள சங்கு, சிங்காசனம் போற் காணில்
3. குடை, யாழ் போற் காணில்
4. முல்லைமொட்டு, தாமரைப்பூப்போற் காணில்
5. சங்கு, வீணை, குறியவள் உருவம், வில், கொடிபோல் பரவிக்காணில்
6. வைபவம், மக்கள், மீன், கோயில், பெரியயானை போற் காணில்
7. மலை, குடை, விருக்கம், வெண்சாமரை தாமரைப்பூ, யானையின் கொம்பு, குல்லாய், கண்ணுடி, சங்கு, மகரதோரணம், பூமி, வீணை, சதுரமான வீடு போற்காணில்
8. பாகலிலை, வண்டு, தாமரை மொக்கு, சிம்மாசனம் போற்காணில்
9. சதுரவடிவம், தாமரைமலர், கண்ணுடி, குடை, சங்கு, தேர் உருளை, சாய்ந்தமரம், குண்டலி போற் காணில்
10. சோற்றுக்கும்பம், குள்ளன், வெற்றிலை, குதிரை, எருதுபோற் காணில்
11. நாமவட்டம் போற் காணில்
12. நோயுற்றூர் காலின் மேற்பக்கமும், கீழ்ப்பக்கமும், பன்றியின் கொழுப்பை தடவி வழித்து நாய்க்கிட அது உண்டு செரித்திடில்

13. நோயுற்ருர் இரத்தத்தை இரண்டு துளி குளிர்ந்த தண்ணீரில்விட இரத்தம் உள்ளே அழுந்திஞல்

## தீரா நோய்

1. எண்ணெய்த்துளி விரைந்து பொங்கிப் பரவிக் காணில்
2. கடுகைப்போல் சிதறிக்காணில்
3. எண்ணெயும் நீரும் ஒன்று கலந்தால்
4. எண்ணெய் நீரினுள் அழுந்திஞல்
5. அம்பு, வாள், இரும்புலக்கை, சூலம், ஈர்வாள், கும்பம், வெற்றிலை போற்காணில்
6. எருது, சிங்கம், ஆளி, யானை, புலி, ஆடு, பன்றி, மனிதன், பாம்பு, ஆமை, பறவை, நரி, குரங்கு, கழுதை, பூனை, தேள் போற்காணில்
7. கண்ணுடி, சிங்கம், பறவை, ஆமை, செந்நாய், குக்குடம், வராகம், வாநரம், பூனை, தேள், அரசர்கைச் சூலம் போலும் பரவிக்காணில்
8. எண்ணெய்த்துளி சிறுநீரில் அமிழ்ந்தால்
9. ஒருகால், மூன்றுகால், நான்குகால்களையுடைய மனிதர்போன்றும், உடல் பருத்த மனிதர் போன்றும், தலையில்லா மனிதர் போன்றும், கையில் கத்தி, சூலம், உலக்கை, வில், அரிவாள், பாம்பு, இவைகளைத் தாங்கிய மனிதன்போலும் காணில்
10. பூனை, எலி, அம்பு, நண்டு, சுரைக்காய், கோழி, புலி, குரங்கு, சிங்கம், குதிரை, வெற்றிலைக்கொடி, எருது, கரடி போற்கர்ணில்
11. பறவை, ஆமை, தேள் போல் காணில் எண்ணெய்த்துளி பரவாமலிருத்தல், பொங்கிப்பரவல் ஆகிய இவை
12. சிறுநீரில் ஈ, எறும்பு, மொய்த்தால்
13. ஆண்பிள்ளையைப்பெற்ற தாயின் முலைப்பாலை பிணியாளர் நீரில் விட்டுப்பார்க்கில் அது சிறுநீரில் கலவாவிடில்
14. நோயுற்ருர் காலின் மேற்பக்கமும் கீழ்ப்பக்கமும் பன்றியின் கொழுப்பைத்தடவி வழித்து நாய்க்கிட அது உண்டு செரியாதாகில்
15. நோயுற்ருர் இரத்தத்தை இரண்டு துளி குளிர்ந்த தண்ணீரில் விட, இரத்தம் தண்ணீரில் நெகிழுமாயின்

குறிப்பு : கண்ணுடி, எருது, வெற்றிலை, குதிரை, ஆகிய இத்தோற்றங்கள் மூலப்பாக்களில் நோய்தீரும், நோய் தீராது எனும் இரண்டு தலைப்புக்களிலும் காணப்படுவதால் இவைகள் ஆராய்தற்குரியன.

---

# Contraceptives in Ancient India.

In the background of the present day outlook in which Family Planning looms large in our national economy and when the attention of the Health Department is focussed on the means and methods of contraception and birth control, it will be not only interesting but also profitable to peep into our own past and see what light ancient wisdom can shed on modern research to solve this all absorbing problem of to-day. Although our ancestors might not have been faced with the problem of restraining a staggering expansion of population as we are to-day, other motives like averting deterioration of health, putting off conception during convalescense etc., would have inspired them in the discovery of contraceptives. The range and the fertility of the field of the intellectual activities of our ancients in such that no one who walks across its bunds in search of anything ever returns disappointed. The Sasrasvati Mahal Library, Thanjavur, presents a perfect cross section of this ancient field of culture and the members of the staff of our Literary (Medical) Research Unit are placing before the public, in the following pages, the results of their researches conducted so far into the methods of contraception prescribed in ancient texts. We are sure that our readers will be struck by the almost incredible cheapness, accessibility and simplicity of the process of contraception set forth in these prescriptions as against the elaborate, costly and abnormal surgical processes recommended to-day.

*[Editor, T. M. S.'S M. Library Journal]*

# Contraceptives in Indigenous Medical Works

*Contributed by the Literary Research Unit,*
*(Central Council of Ayurvedic Research), T. M. S. S. M. Library, Thanjavur.*

*From*: SARABHENDRA VAIDYA MURAIGAL — GARBHINI BALAROGA CHIKITSAI — PAGE 65 (PUBLISHED BY T. M. S. S. M. LIBRARY, THANJAVUR.)

1. The woman, who takes the *roots of *Indigofera tinctoria* (அவுரி) and *Benincasa Hispoda* (பூசணி) in equal weight, ground with water on the fourth day of her menses will not conceive.

2. Taking of the unfolding flower sheath of *Phoenix Dactylifera* (பேரிச்சை खजूर), ground with milk is contraceptive.

3. Bundle up leaves of *Mimosa Amara* (உசிலி) and place the bundle amidst Sodium Chloride (கல்லுப்பு). Take the leaves and grind them with cow's milk. Administer this to woman to prevent conception.

---

* Drugs marked with an asterisk are compounds of *upavisha* and must be administered carefully.

*From*: Mss. No. B. L. 10817/ D. 11178, Palm leaf, Grantha and Tamil Scripts, in T. M S. S. M. Library.

4. During the monthly course, a woman who takes the flower of *Hibiscus Rosa Sinensis* (செம்பரத்தை जपाकुसुम) ground and mixed with Rice Vinegar (காடி कांजिकम्.) will not conceive.

5. The woman who takes the ground paste of the leaves of *Bambusa Arundinaceae* (மூங்கில் இலை वेणु पत्रम्) mixed with cow's milk will not conceive.

*From*: Mss. No. B. L. 10807/D. 11173, Grantha script in T. M. S S. M. Library.

6. The ground paste of the fruits *Butea Frondosa* (புரசின் பழம் किंशुक फलम्,) administered with butter, sterilises woman.

7. The paste of the seeds of **Nerium Odorum Solanel* (அலரிவிதை करवीरस्य बीजम्,) administered with butter, sterilises woman.

*From*: Tamil Mss. No. I (Pambatti Siddhar Edu, Anubhava Vaidya Murai, – Secured from Salem).

8. Flowers of *Sesamum Indicum* (எள்ளின் பூ) and tender leaves of **Calotropis Procera* (எருக்கின் துளிர்) of equal quantity, ground with water and administered is contraceptive.

9. A mixture of the following, when taken, sterilises women:

Juice of *Citrus lemon* (எலுமிச்சம்பழச்சாறு) 10 *palas*;

Ground paste of the root of *Pandanus Tectorious* (தாழைக்கிழங்கு) as much as lemon fruit;

*Ferula Asafoetida* (பெருங்காயம்) $3\frac{5}{8}$ *gunjas*.

10. Unripe fruits of *Grewia Asiatica* (ஈச்சங்காய்) given to woman, with tender cocoanut water, prevents conception.

11. Seeds of Wild Chembai (காட்டுச்செம்பை), ground with urine and given to woman is contraceptive.

12. Remove the rinds of the seeds of *Erythrina Indica* (கல்யாண முருங்கை) grind inner pulps with milk and honey, and give the medicine for three days during menses, to prevent conception.

*From*: Rasikaranjani (Marathi manuscript), T. M. S. S. M. Library.

13. *Stanza 170*: Taking one *palam* of three year old jaggery for fifteen days is contraceptive.

---

*Drugs marked with an asterisk are compounds of *upayisha* and must be administered carefully.

14. *Stanza 171*: The decoction made of the root of *Plumbaxo Zeylanica* ( கொடுவேலி चित्रकम् ), ground in rice wash, taken on the fourth day of the menses makes woman barren.

15. *Stanza 172*: Four and half *tolas* of nicely powdered *Terminalia Belerica* ( தான்றிக்காய் विभीतक ), taken in rice wash during menses for seven days make woman barren.

16. *Stanza 175*: Taking decoction of *Terminalia Belerica* ( தான்றிக்காய் विभीतक ), for seven days after menses, makes a woman barren.

*From*: YOGARATNAKARA.

17. Piece of rock salt, mixed with gingelly oil, placed in the vagina at the time of coition is contraceptive.

18. Grind root of *Amaranthus Gangeticus* ( சிறுகீரை तण्डलीयक ), in rice wash and drink for three days at the end of the monthly course. It will prevent conception.

19. Fumigation of the vagina at the close of monthly course with the smoke of *Azadirachta Indica* ( வேப்பு निम्ब ), is contraceptive.

20. Each one *tola* of powdered *Abies Webbiana* (தாளிசபத்திரி तालीस), and *Ochre* ( காவி गैरिक ), taken in cold water on the fourth day of menses prevents conception.

*From*: BHAISHAJARATNAVALI.

21. She, who takes the powders of *Ficus Religiosa* ( அரசு ), *Embellia Ribes* ( வாயுவிளங்கம் विडङ्कम् ) and Borax ( வெண்காரம் टंकणम् ) of equal quantity with milk, will not conceive ( also in Bhavaprakasa ).

22. Woman, who takes for three days during menses, flowers of *Hibiscus Rosa Sinensis* ( செம்பரத்தை जपा ), ground with rice vinegar along with old jaggery, will not conceive ( also in Bhavaprakasa ).

23. On the fourth day of the menses, leaves of *Cissampelos Pereira* ( வட்டத்திருப்பி पाठा ), ground and taken prevent conception.

24. The powders of *Emblica Officinale*, *Anjana*, *Terminalia Chebula* ( நெல்லிக்காய் आमलकी, அஞ்ஜனக்கல், கடுக்காய் हरीतकी ) taken with water is contraceptive.

25. *Kalka* taken of *Cordia Myxa* ( நறுவளி शेलु ) well ground is contraceptive.

26. Rasanjana ( மரமஞ்சள்சத்து ) taken in cold water along with powdered *Terminalia Chebula* ( கடுக்காய் हरीतकी ) and *Emblica Officinale* ( நெல்லிக்காய் आमलकी ) prevents conception.

*From*: ANANGARANGA BY KALYANAMALLA (PUBLISHED BY MEHARCHAND LAKSHMAN DAS, SAITH MITTA BAZAAR, LAHORE) PAGE 31.

27. *Plumbago Zeylanica* (கொடுவேலி चित्रक) boiled in husk water and taken at the close of menses time makes woman barren.

28. Half a *pala* of the seeds of *Butea Frondosa* (புரசு रक्षो भूरुह) taken with rice wash for seven days from the first day of mensturation makes a fertile woman barren.

(*From*: KAMAVIJNAN — HINDI BOOK — Chandraberi Publication by Kranti Prakarsam, Varanasi)

29. The nice powder of rinds of *pista* (பிஸ்தா) and *Scindapsus Officinale* (யானைத் திப்பிலி गज पिप्पली) taken everyday in half tola weight, is a successful contraceptive.

30. One *masha* weight of each of the following, taken with cold water for three days after the third day of menses every month, prevents conception for one year.

| | | |
|---|---|---|
| *Piper Longum* | திப்பிலி | पिप्पली |
| *Embellia Ribes* | வாயுவிளங்கம் | विडंकम् |
| *Borax* | வெண்காரம் | टंकणम् |

31. Ashes of *Butea Frondosa* (புரசு पलाश) taken along with *Ferula Asafoetida* (பெருங்காயம் हिंगु) prevent conception.

32. The solution of one *masha* of Alum (படிக்காரம் स्फाटिकी) in $\frac{1}{8}$ seer of water infused into Vagina is contraceptive.

33. Solution of one *tola* of old jaggery (பழம்வெல்லம் पुराण गुड) taken for seventeen days from the date of menses prevents conception.

34. The decoction made of root of *Gossypium Indicum* (பருத்தி कार्पास) with water is contraceptive.

35. Application of cotton, soaked in the oil of *Azadirachta Indica* (வேம்பு निम्ब) to the vagina prevents conception.

---

# OUR NEWS-REEL

On the 10th April 1967, the members of the staff of the Literary (Medical) Research Unit celebrated for the first time Tirumular Day and opened a portrait of the Siddha saint, Tirumular. The function was held in the premises of the Sarasvati Mahal Library.

Thiru M. S. Sarangapani Mudaliar, Commissioner of Hindu Religious and Charitable Endowments Board presided on the occasion. Thiru V. Balaramiah, Chief Presidency Magistrate opened the portrait of Tirumular after an eloquent speech on the ancient and infallible nature of the Siddha medical system, exhorting the Government to render all possible help to the institutions working for the publication of the rare works on the subject. Dr. K. S. Uttamarayan, Retired Siddha Professor delivered his special address for the occasion on the medical works of Tirumular. Thiru V. S. Venkatasubramania Sastrigal, Senior Research Officer and Dr. A. Shanmugavelan, Siddha Research Officer of the Literary Research Unit and Thiru V. Gopala Iyengar, Librarian, Sarasvati Mahal Library participated in the function, delivering short and spicy speeches appropriate for the occasion. Thiru O. A Narayanaswami Iyer, Honorary Secretary of the Research Unit welcomed the guests in the beginning and thanked them in the end.

On 20—5—1967, a sweet and small function was organised by the Literary Research Unit to felicitate Dr. K. S. Uttamarayan, H. P. I. H., on his appointment as Principal of the College of Indian Medicine at Palayamkottai. Thiru V. S. Venkatasubramania Sastri presided. Dr. A. Shanmugavelan, Siddha Research Officer, Thiru C. Rajarajeswara Sarma, Junior Ayurveda Research Officer, Thiru N. V. Venkatasubramania Sastri, Sanskrit Calligrapher and Thiru M. Seeralan, Assistant Librarian of the Literary Research Unit and Thiru V. Gopala Iyengar, Librarian, Sarasvati Mahal Library, besides the president of the function, made eulogistic speeches offering a chorus of praise to Dr. Uttamarayan on his great service to the cause of Siddha Medicine in general and thanking him for his guidance and help to the Literary Research Unit in particular. The one point that was conspicious in every eulogistic speech was that Dr. Uttamarayan's devotion to the cause of Siddha System was not irreconcilable with his regard for Ayurveda. The chief guest of the evening replied suitably acknowledging the eulogies only as the good wishes and blessings of the speakers and promising to dedicate himself with greater vigour to the cause of Indian Medicine, in his new capacity as Principal. After the meeting Dr. Uttamarayan was entertained at Tea.

The Post-Graduate Education and Research Assessment Commitee of the Gujarat Ayurveda University visited the Research Unit of the Central Council of Ayurvedic Research at Sarasvati Mahal on 16th September 1967. The Committee consisted of Sri V. I. Thacker, Vice-Chancellor of the Ayurvedic University, Sri M. P. Vyas,

Chairman of the Siddha Ayurvedic Council and Ex-Minister of Health of Gujarat State, Dr. P. M. Mehta, Member of the Institute for Ayurvedic Studies and Research at Jamnagar and Sri V. N. Dvivedi, Director of I. A. S. R., Jamnagar and Sri D. M. Joshi, the Registrar of Gujarat Ayurvedic University. After being cordially welcomed by the Senior Research Officer, Thiru V. S. Venkatasubramania Sastri, the party of guests posed for a group photograph with the staff of the Research Unit. They examined in detail the Unit's Work of Research and expressed complete satisfaction at the progress of the work made in the Unit.

A tea was arranged in honour of the distinguished guests. Thiru V. Gopala Iyengar, Librarian, Sarasvati Mahal welcomed the guests in an eloquent and fitting manner. Responding to the welcome Sri M. P. Vyas gave a very illuminating talk stressing on the comprehensive range and infallible nature of Ayurveda which is a Sastra and is based on eternal basic principles, as compared with modern medical systems which are but science and are based on the varying results of observation. He said that the hundreds and thousands of manuscripts on Indian medicine, if published will form a great boon to the modern world in which more than 50 % of the people are said to be suffering from some incurable disease or other. The refrain of his exhortation lay in calling forth, the votaries of the Ayurvedic and Siddha systems to work in unison and harmony with each other, as the two systems are complementary and not contradictory forming two different phases of the same Sastra.

After tea, the committee visited the Sarasvati Mahal Library and spent a considerable time examining, with admiration and wonder, the various treasures of knowledge preserved in this great Temple of Learning.

The annual celebration of Rajah Serfoji Day came off on 24th September 1967. The function started with a commemoration worship to Lord Vignesvara installed in the Library premises. The Rajah's portrait was profusely garlanded and adorned and the members of the staff of the Library and the Literary Research Unit assembled in front of the portrait and paid homage to the great scholar king who has bequeathed to humanity his Kingdom of Letters, the Sarasvati Mahal, which is hailed as the eighth wonder of the world.

On 23—10—67 the All India Radio, Tiruchirapalli broadcast at 9-30 P. M. through its Trichi, Coimbatore and Tirunelveli transmitting stations, a documentary feature on the Sarasvati Mahal. Lasting for about an hour, the feature had a wide coverage including in its scope the constitutional and the Administrative details, the historical and the cultural background, the preservative and the propogative techniques, the hidden treasures of Literature, Science and Art and the present equipments and the future needs of this great treasure of learning. Composed in the form of personal interviews with the persons at the helm, the feature gave a thorough description of the activities of the departments of several languages and our medical wing, the Literary Research Unit,

Illustrated with occasional readings from our palm leaves and variegated with musical renderings of songs and dance-pieces from our manuscripts, the feature produced almost an actual vision of the Library before the listener's mental eye. We thank the authorities of the All India Radio for having carried our Library over the air and we congratulate Thiru R P. Rangan on his preparing and editing this documentary feature. We are glad to learn that the feature is to be broadcast again at 6-15 P. M. on 11—11—67 for the benefit of those who have missed the first broadcast.

As usual a large number of tourists, scholars and other distinguished persons from all over India and from abroad visited the Library during recent months, some for pleasure, but many for profit. Extracts from their observations about the Library will be published under the usual heading, "From our Visitors' Book" in some subsequent issue. Two visits however, deserve special mention here. The one is that of the King and Queen of Sikkim with their party and the other that of the Prince of Arcot.

On 31—8—67 their Highnesses, the Chogyal and the Gyalmo of Sikkim visited the Library in the course of their Indian tour. They were received with *Purnakumbha* and garlanded. The royal couple showed a very keen interest in the various manuscripts collected in the Library and were particularly attracted by the miniature paintings especially of the Ramayana. Some of the unique publications of the Library were presented to His Highness the Chogyal and he reciprocated the gift by presenting the Library with a copy of profusely illustrated volume RGYAN-DRUG MCHOG-GNYSIS published by the Namgyal Institute of Tibetology, Gangtok, Sikkim.

On 4—9—1967 His Highness, the Prince of Arcot visited the Library and the Literary Research Unit and saw, with profound admiration, the wonderful collection of manuscripts and books on all conceivable subjects, the care with which they are preserved and the useful work that is being done here. His Highness and his party took a special interest in the Urdu and Persian manuscripts in the Library. Srimanth Ry. Thulajendra Rajah Saheb, Life Member of the Administrative Committee of the Library entertained the party at Tea. The Prince of Arcot expressed great pleasure at the welcome offered to him and realled the close association between the royal houses of Thanjavur and Arcot in the History of Tanjore in the earlier centuries.

---

Two copies of each book have to be sent for review in the Journal. Articles published in this Journal can be reproduced with the permission of the Editor. All communications regarding the Journal may be addressed to :—

THE EDITOR,
The Journal of the Tanjore Maharaja Serfoji's
Sarasvati Mahal Library,
T. M. S. S. M. Library,
THANJAVUR,
( Madras State ) India.

Printed at the Sri Vani Vilas Press, Srirangam.